

வ்ருஸ்சிகே ரோஹிணீஜாதம் ஸ்ரீபாணிம் நிசுளாபுரே |
ஸ்ரீவத்ஸாங்கம் காயகேந்த்ரம் முநிவாஹநமாஸ்ரயே ||

கார்த்திகை மாதத்தில் ரோஹிணீ நக்ஷத்திரத்தில், நிசுளாபுரி என்னும் உறையூரில், ஸ்ரீவத்ஸம் என்னும் மறுவின் அம்ஸமாய் அவதரித்தவராய், வீணையைக் கையிலேந்திப் பெரிய பெருமாளை மனமுருகப் பாடுபவராய், லோகஸாரங்க மஹாமுனிவரை வாஹநமாகக் கொண்டவரான திருப்பாணாழ்வாரை ஆஸ்ரயிக்கிறேன்.

நவம்பர் 1988

# ஸப்தகிரி

தனிப்பிரதி ரூ. 1 மலர் 19

வருடச் சந்தா ரூ. 12 இதழ் 6

## உள்ளுறை



### அட்டைப்பட விளக்கம்

முன்னட்டையில் : யானை வாகனத்தில் ஸ்ரீ பத்மாவதித் தாயார், திருச்சானூர் கோயில். பிரம்மோத்சவ நிகழ்ச்சி.

2 ம் பக்கம் : திருமலை பிரம்மோத்சவத்தின் போது பங்கேற்ற பல்வேறு கலைஞர்களின் இசைவிழா விழா நிகழ்ச்சிகள்

3-ம் பக்கம் : புஷ்பயாகம் - திருமலை

பின்னட்டையில் : ஊஞ்சல் சேவை - ஸ்ரீ பத்மாவதித் தாயார், திருச்சானூர்

சிறப்பாசிரியர்
திரு. சி.எச். வெங்கடபதிராஜு I.A.S.,
செயலாட்சித் தலைவர்,
தி.தி.தேவஸ்தானம், திருப்பதி.

அச்சிடுபவர்
திரு. எம். விஜயகுமார் ரெட்டி,
மேலாளர்,
தி.தி. தேவஸ்தான அச்சகம்,
திருப்பதி.

ஆசிரியர்
திரு. கே. சுப்பாராவ், எம்.ஏ.

துணையாசிரியர்:
திரு. என். எஸ். ராமமூர்த்தி, எம்.ஏ.,

பிரதிகளுக்கு:
EDITOR,
"Sapthagiri"
T. T. Devasthanams,
TIRUPATI.

# உங்களுடன் . . . .

பொங்கும் கடல் நீரினையும், தொட்டதைச் சாம்பலாக்கிடும் எரிப்பிழம்பையும், அனலுமிழும் எரிமலையினையும், எப்பொருளையும் புழுதியாக்கிடும் புயற்காற்றினையும் கண்டு பயந்த மனிதன், சலசலத்தோடும் ஆற்று நீரினையும், ஒளிர்விடும் தீச்சுடரினையும், விண்ணை முட்டிடும் மலையினையும், தவழ்ந்து செல்லும் தென்றற்காற்றினையும் பார்த்து மகிழ்ந்தான். அம்மகிழ்ச்சியின் விளைவு, அவற்றின் நண்பனுனன். பின்னர் அவற்றையே தொழ ஆரம்பித்தான். ஆம் இயற்கையின் எளிமையினை-அது தந்திட்ட அமைதியினை அனுபவித்த அவன், அவ்இயற்கையின் பின்னுல் ஏதோ ஒரு சக்தி இலங்கு வதை உணர்ந்தான். அதற்குத் தன் கற்பனையால் உருவம் சமைத்தான், காலப் போக்கால் அது பலவாயிற்று. இவ் ஆரம்பமே படைத்தவனுக்கும், படைக்கப்பட்டவைகளுக்கும் ஒரு புனிதமான உறவினைத் தோற்றுவித்தது. அவ்வுறவின் பிடிப்பே, அவ்வுருவங்களுக்குக் காடுகளிலும், மலைகளிலும், ஆற்ரேரங்களிலும் பல கோயில்களைக் கட்ட வழி வகுத்தது.

இயற்கை உணர்த்திய அச்சக்தியை இயற்கையின் பின்னணியிலேயே அனுபவிக்க விரும்பினுன். அதனுல்தான் மக்கள் நெருக்கம் இல்லாத நகர் மற்றும் கிராம எல்லைகளில் கோயில்களைக் கட்டி வைத்தான் அவன். எந்த அமைதி யினை அந்த இறை இல்லம் தந்ததோ, அது நலிவுறுது இருந்திடவும், மனம் மொழி மெய்யால் அப்பரமனை வணங்கிட வும் விரும்பினுன். அப்போதுதான் அவனுல் தன்னை உணர முடிந்தது, தன்னைப் படைத்தவனை உணர வழிவகுத்தது.

இறைவனை மனிதன் உயர்த்தியே வைத்தாலும், ஆண்டவனைத் தன்னிடமிருந்து வேறுபடுத்திக் கொள்ள வில்லை. தனக்கும் பரமனுக்கும் உள்ள உறவினை அறிந்து தெளிந்து அதனைப் பலப்படுத்த அவனுக்குத் தேவையானது தனிமை ஒன்றுதான். தனிமையில்தான் அவன் அறிவு ஆக்கப் பூர்வமாகச் சிந்திக்க முடிந்தது. இதற்கு இயற்கையே அவனுக்குப் பெருமளவில் உதவியது. ஜன நெருக்கமற்ற பகட்டில்லாத காடுகளும், மலைக்குன்றுகளும், ஆற்ரேரங் களும் அவனுடைய முயற்சிக்குப்பெரிதும் உதவின. எளிமையின் அழகு அவன் சிந்தனையைப் புனிதப்படுத்தியது. அதனுல் எளியவனுக்கும், எளியவனுனன் அல்வலியோனுன அப்பரமன், விண்ணை முட்டும் மலையே அவனுறையும் பெருங்கோயி லாயிற்று, தவழ்ந்து ஓடும் ஆற்று நீரே அபிடேகத்திற்காயிற்று; காடுகளில் மலர்ந்திட்ட மலர்களே அலங்காரமாயிற்று; கொண்டற்காற்றும் தென்றற்காற்றும் சாமரம் வீசின; மலைச்சாரல்களில் விளைந்திட்ட மூலிகைகளே தூபமாயிற்று. சூரிய சந்திரர்களே தீபங்களாயினர்; மரங்களில் காய்த்திட்டக் காய்கனிகளே நைவேத்யமாயிற்று இத்தகு அருமைச் சூழ்நிலையினை விரும்பிய பக்தனின் நெஞ்சமே மஞ்சமாயிற்று. இந்த எளிமையைத்தான் கண்ணன் தன் கீதையில் ''பத்ரம் புஷ்பம் பலம் தோயம் யோ மே பக்த்யா ..'' என்று வரும் அடிகளால் கூருமல் கூறி நின்றுன். பக்தனிடம் அப்பரமன் கேட்பது எளிமையில் உதிக்கும் வலிமையான பக்தியுள்ளத்தைத்தான். அதனுல்தான் என்னவோ விதுரர் இட்டக் கூழும், குசேலர் வீட்டு அவலும், சபரி கடித்தக் கனியும், கண்ணப்பர் உமிழ்ந்த எச்சிலும் ஆண்டவனுக்கு அமிர்தமாயிற்று போலும்.

இவற்றையெல்லாம் எண்ணிப் பார்த்துத்தான், இயற்கையினூடே இறைவனை ஆராதிக்க ஆன்ரேர் நினைத் தனர் எனக்கருதும் அதே தருணத்து, இயற்கை மனிதனின் உடல் மற்றும் உள்ள வலிமைக்குப் பெரிதும் துணை போகின் றது என்பதையும் அவர்கள் உணர்த்தியுள்ளனர் என்பதையும் அறிதல் அவசியம். இன்று நாட்டின் பல பகுதிகள் வறட்சி மற்றும் வறுமையின் பிடிப்பில் சிக்கியிருப்பதற்குக் காரணம் பெருமளவில் காடழிப்புதான் என்பது வல்லுநர்கள் கூறும் செய்தி. இவ்வுண்மையினை உணர்ந்து தெளிந்த நம் முன்னுேர்கள் 'சமுதாயப் பாதுகாப்பு' அவசியத்தை இறை உணர் வினூடே ஊட்டிவிட்ட அவர்தம் பேரறிவு போற்றுதற்குரியது.

இறைவனின் மெய்யடியார்கள் பலர் இறைவனின் புகழ்பாடுவதில் மட்டுமல்லாது, அவனை அர்ச்சிக்கவும் அலங் கரித்து ஆனந்திக்கவும் மலர்த்தோட்டங்கள் வளர்த்து வந்ததை, பெரியாழ்வார், திருமலை நம்பி, அனந்தாழ்வார் போன் ரேரது வாழ்க்கை வரலாறுகள் உணர்த்தும். இவர்கள் யாவரும் நம் முன்னுேர்களின் எண்ணத்தெளிவை நன்கு அறிந் தவர்கள்தாம். விநாயக வழிபாட்டின்போது அர்ச்சிக்கப்படும் இலை, காய், கனி வகைகளைப் பார்த்திடும்போது, புல் பூண்டு முதல் ஆல்வேல் வரை தாவரங்களின் இன்றியமையாமையினை உணர்ந்தே செயல்பட்டனர் என்பது மிகத் தெளிவு. மரம் நடும் விழாவோடு அன்று அம்மரத்திற்கு நீர்விடும் நிகழ்ச்சியினையும் அவ்விழாவோடு நடத்தி முடித்திடும் நாம், இயற்கை அழிவு நமது அழிவேயாகும் என்பதை உணரத் தவறிவிட்டோம். காடுகள் அழிவதன் மூலம், நமது மூச்சே அடுத்த வனின் மூசசை நிறுத்திவிடும் என்ற விஞ்ஞான உண்மையை எண்ணிப் பார்க்காதது, நமது சந்ததியினர்க்கு நாமே மரணக் குழி தோண்டுகிரேும் என்பதைத்தான் காட்டும்.

இயற்கையின் வளமையே நமது வலிமை என்றுணர்ந்துதான், காலங்கடந்தாலும் அரசும், பல சமூக அமைப்புகளும் மரம் நடல், காடு வளர்த்தல், வன சரணுலயங்கள் அமைத்தல் போன்ற திட்டங்களை மேற்கொண்டு வரு கின்றன. இவ்வகையில் தி. தி. தேவஸ்தானமும் திருமலையில் பல நன் முயற்சிகளை மேற்கொண்டுள்ளது. சோலைகள் சூழ்ந்த தியான மண்டபங்களை, குருகுல அமைப்புகளை அமைத்து, முடிந்தவரை திருமலையை, மூலிகை மற்றும் காய் கனிச் செடிகளாலும் மரங்களாலும் மூழ்கடித்திடும் வகையில், போர்க்கால அடிப்படையில் பல திட்டங்களை மேற்கொண்டுள் ளது. எதிர்வரும் திருமலைக் கோயில் புஷ்பயாகத்தின்போது, அவ்அலங்காரப் பிரியனுன மாலவன் கொள்ளும் மலர் அலங்காரம், இயற்கையின் படைப்புத் திறனையும் மட்டுமன்றி, அவற்றை வளர்த்துப் பாதுகாப்பதன் அவசியத்தையும் காட்டவே செய்யும் என்பதை அறிந்து செயல்படுவோமாக!

# செய்திச் சுருக்கம்

திருமலை ஸ்ரீவேங்கடேஸ்வர சுவாமி கோயிலின் நவராத்திரி பிரம்மோத்சவம் 11-10-88 முதல் 19-10-88 வரை வெகு விமர்சையாகக் கொண்டாடப்பட்டது. இதுபோது, வெள்ளித் தேரில் உத்சவரின் திருவீதி திருவுலா திருக்காட்சி கண்களுக்கும், கருத்துக்கும் விருந்தாக அமைந்தது. தி. தி. தேவஸ்தானத்தின் பொறுப்பாண்மைக் குழு உறுப்பினர்கள் சிலரும், உயர் அலுவலர்களும் கலந்து கொண்ட இத்திருத்தேர் நிகழ்ச்சியில் சுமார் 50,000 யாத்திரிகப் பொதுமக்கள் கலந்து கொண்டனர். 15-10-88 அன்று நடைபெற்ற கருட சேவை விழாவிற்கு சுமார் 85,000 பக்தர்கள் கலந்து கொண்டு திருமலையானின் புகழ் பாடினர். இப்பத்து நாள் பிரம்மோத்சவத்திற்கு நாட்டின் எல்லா பகுதிகளிலிருந்தும் சுமார் 3.5 இலட்சம் யாத்திரிகர்கள் திருமலைக்கு வருகை புரிந்தனர். உண்டி மூலமாக ரூ. 48.28 இலட்சமும், லட்டு விற்பனை மூலமாக ரூ. 27.55 இலட்சமும், ஆர்ஜித சேவைகளின் மூலம் ரூ. 16.77 இலட்சமும், சிறப்பு நுழைவு சீட்டு விற்பனை மூலம் ரூ. 13.24 இலட்சமும் ஆக இப்பத்து நாள் உத்சவத்தின்போது திருமலைக் கோயிலின் வருமானம் சுமார் ரூ. 1.06 கோடியாகும். இச்சிறப்பு விழாவின் போது காலையிலும் மாலையிலும் நடைபெற்ற சமய, இசை நிகழ்ச்சிகளின் போது சிறந்த கலைஞர்களான திருமதி. எம். எல். வசந்தகுமாரி, திருமதி. வேதவதி பிரபாகர் ராவ், திரு. துவாரம் மங்கத்தாயாரு, திரு. சிட்டி பாபு, திரு. எல்லா வேங்கடேஸ்வர ராவ், திருமதி. சச்சிதானந்த சரஸ்வதி, திருமதி. வெங்கல பிரபாவதி, திருமதி. உமா சௌத்ரி, திருமதி. சுமித்ரா குஹா உள்ளிட்டு பலரும் பங்கேற்றனர். (பங்கேற்ற சில இசைக் கலைஞர்களின் நிகழ்ச்சிப் புகைப்படங்கள் இவ்இதழின் முதல் உள் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ளன).

திருப்பதியிலுள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் ஸ்ரீ கோவிந்தராஜ சுவாமி கலைக் கல்லூரின் வணிகத் துறைப் பேராசிரியர் பி. சந்திரசேகர நாயுடு அவர்கள் ஆந்திர மாநில அரசினால் 'சிறந்த ஆசிரியர்' விருது பெற்றுள்ளார். இவர் சுமார் ஒரு வருட காலம் தி. தி. தே. கல்வி அலுவலராகவும் பணி புரிந்துள்ளார்.

ஆந்திர மாநில அலுவலரான டாக்டர். பி. நாராயண ராவ் அவர்கள் தற்போது தி. தி. தேவஸ்தானத்தின் மருத்துவ அலுவலராக பதவி பொறுப்பேற்றுள்ளார்.

மற்றைய செய்திகள் :

திருப்பதியிலுள்ள ஸ்ரீ வேங்கடேஸ்வரா பாலமந்திரில் படிக்கும் மாஸ்டர் ரமேஷ் பாபு எனும் மாணவனின் மூளையில் ஏற்பட்ட ஒரு நோயினால் கண் பார்வை இழந்ததால், ஆண்டு ஒன்றிற்கு ரூ. 6000/- வீதம் மூன்றாண்டுகளுக்கு ஏற்படும் செலவினை ஏற்றுக் கொண்டு அவரை சென்னை விட்டில் ஃப்ளவர் கான்வன்ட்டில் சேர்ப்பதென்றும் மேலாண்மை முடிவு செய்துள்ளது.

இந்து சமயத்தின் குறிப்பாக ஸ்ரீ வேங்கடேஸ்வர சுவாமியின் புகழ் பரப்பும் வகையில் திருமலையில் உள்ள தி. தி. தேவஸ்தானத்தாரின் எல்லா தங்கு அறைகளிலும் தமிழ், தெலுங்கு கன்னடம், ஆங்கிலம் ஆகிய மொழிகளில் பகவத் கீதை நூல்களை மாதிரிக்கு ஒன்று வைத்து, இவ்வகை விளம்பரத்தின் மூலம் வேலை டுவோர்க்கு அப்புத்தகங்களை விற்பதென்றும், இதற்காக ரூ. 3 இலட்சம் ஒதுக்குவதென்றும், மேற்படித் தங்கு அறைகளில் ஸ்ரீ வேங்கடேஸ்வரர் மற்றும் ஸ்ரீ பத்மாவதித் தாயார் இணைந்த வண்ணத் திருவுருவப் படங்களை வைப்பதற்கு ரூ. 2 இலட்சம் ஒதுக்குதென்றும் மேலாண்மை முடிவு செய்துள்ளது. மேலும் திருமலைக்கு வரும் முக்கிய விருந்தினர்களுக்கு அளித்திடும் வகையில் திருமலைக் கோயில் பற்றிய முழுத்தகவங்களையும், வண்ணப் படங்களையும் அடங்கிய கையேடுகளை சென்னை பி. என். கே. அச்சகத்தில் வெளியிடும் வகையில் 5000 பிரதிகளுக்காக ரூ. 50,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

யாத்திரிகப் பொது மக்கள் பயனுறும் வகையில் தி. தி. தேவஸ்தானம் ஒவ்வொரு ஆண்டும் திருப்பதியில், இலவச கண் அறுவை சிகிச்சை முகாமினை நடத்தி வருகின்றது. இவ்வகையில் 1989-ஆம் ஆண்டுக்கென 21-1-89 மற்றும் 22-1-88 தேதிகளில் திருப்பதியில் 3-வது தர்ம சத்திரத்தில், ஹைதராபாத் சரோஜினி தேவி கண் மருத்துவ மனையைச் சார்ந்த டாக்டர். பி. ரங்கா ரெட்டி தலைமையில் இலவச கண் அறுவை சிகிச்சை முகாம் ஒன்று நடைபெற உள்ளது. சிகிச்சை பெறும் நோயாளிகளுக்கும், அவர்களுடைய உதவியாளர்களுக்கும் இலவச தங்கு வசதி, உணவு மற்றும் அறுவை சிகிச்சை மேற்கொண்ட நோயாளிகளுக்கு இலவச மூக்குக் கண்ணுடிகளுடன், மருந்துகளும் கொடுக்கப்படும். இவற்றிற்காக ரூ. 80,000 ஒதுக்கப்பட்டுள்ளது.

திருமலைக் கோயிலில் உண்டியல் காணிக்கைகளைப் பிரித்து எண்ணிப் பார்த்திடும் இடத்திலும், உண்டியல் இடத்திலும் வண்ணக் கேமராக்களையும், தொலைக்காட்சி பெட்டிகளையும் பொருத்துவதற்காக மேலாண்மையினால் ரூ. 6 இலட்சம் ஒதுக்கப்பட்டுள்ளது. ❀

# ஸ்ரீ மணவாள மாமுனிகள்

சிந்தமலர் பொழுதில் சூழ் குருகாதிபன்
கலைகள் விளங்கிடு நாள்
காரமர் மேனி அரங்கநகர் இறை
கண்கள் களித்திடுநாள்
அந்தமில் சீர் மணவாள முனிப்பரன்
அவதாரம் செயுநாள்
அழகு திகழ்ந்திடும் ஐப்பசியில்
திருமூலமது என்னும் நாளே'

ஸ்ரீமந் நாராயணனுக்குத்தொண்டு செய்வதையே தன் வாழ்க்கையாகக் கொண்ட அனந்தன் (ஆதிசேஷன்) ராமானுஜராகத் தோன்றி "நாரணனைக் காட்டிய வேதம் களிப்புற" பிரும்ம ஸூத்திரத்திற்குப் பாஷ்யம் செய்து எங்கும் எம்பெருமானர் தரிசனம் என்று புகழும்படி மத ஸ்தாபனம் செய்தார். பின்னர் அவரே மாமுனிகளாகத் தோன்றி உபய வேதாந்த ஸாரத்தை உள்ளங்கை நெல்லிக் கனியாக்கி குரு பரம்பரையாகிற ஹாரத்தின் முடி(வு) மணியாகத் திகழ்ந்தார்.

ஆசார்யர் படுத்தப் படுக்கையாக இருக்கிறார். அவர் முகம் வாடியிருக்கிறது. சிஷ்யர்கள் 'ஏன் துயரப்படுகிறீர்கள்?' என்று கேட்கிறார்கள்.

அப்போது ஆசார்யர் "வேறு என்ன கவலை எனக்கு? ஆழ்வார்களின் திவ்ய பிரபந்தங்களிலே மகாவிஸ்வாசமும் ருசியும் உடையவராய் இந்த பக்தி மதத்தை நமக்குப் பின் வளர்க்கப் போகிறவர் யார்? என்றுதான் கவலைப்படுகிறேன்" என்றார்.

"ஏன் நானிருக்கிறேனே," என்று ஒரு சிஷ்யர் அடிபணிந்து நின்றார்.

'வார்த்தை போதுமா?' என்று குரு கேட்டதும் சிஷ்யர் குருவின் திருவடிகளைத் தொட்டு பிரதிக்ஞை செய்தார். குரு அகமகிழ்ந்து அவரை அருகில் அழைத்து ஆசீர்வதித்துக் கூறியதாவது;

"திருவாய் மொழி முதலான பிரபந்தங்களை ஆராய்ந்து பரவச் செய்வதிலேயே கண்ணும் கருத்துமாக இருக்கவேண்டும். ஸ்ரீரங்கத்தில் வசித்துக்கொண்டே ஆழ்வார்களின் சித்தாந்தத்திற்கு புதிய உயிர் அளிக்க வேண்டும்".

இந்த சிஷ்யர்தான் மணவாள மாமுனி என்றும் பெரிய ஜீயர் என்றும் பிரசித்தி பெற்றவர். ஆசாரியர் திருவாய்மொழிப்பிள்ளை. திருவாய் மொழியில் வல்லவராக இருந்து அந்தக் கொள்கையை ஒழுக்கத்தாலும் உபதேசத்தாலும் பிரசாரம் செய்து வந்தவர். இவருடைய ஆசார்யர் பிள்ளை லோகாசாரியார்.

ஆசார்யர் ஆணைக்கிணங்க ஸ்ரீரங்கத்தில்தங்கித்தென்கலையாகிய தமிழ் பிரபந்தங்களைக் கொண்டே தமிழர்களை உய்விக்க முயன்றார்.

ஊழிதோறும் ஊழிதோறும்
உலகம் உய்ய
உம்பர்களும் கேட்டுய்ய அன்பினாலே
வாழியெனும் பூதம் பேய்
பொய்கை மாறன்
மழிசையர் கோன் பட்டர்பிரான்
மங்கை வேந்தன்
கோழியர் கோன் தொண்டர் துகள்
பாணன் கோதை
குல முனிவன் கூறியநூல் ஓதி வீதி
வாழியென வரும் திரளை
வாழ்த்துவார் தம்
மலரடி என் சென்னிக்கு
மலர்ந்த பூவே.

என்கிறார் மணவாள மாமுனிகள்.

இவர் தன் இளமையில் தகப்பனாரிடமே கல்வி பயின்றார். திருமணமான பின்பே இவர் துறவு பூண்டார். ஸ்ரீ ரங்கத்தின் ஸ்ரீசடகோப ஜீயர் என்பவரிடம் தீக்ஷை பெற்றதால் 'பெரிய ஜீயர்' என்ற பெயரும் அமைந்தது.

இவர் ராமானுஜர் விஷயமாக 'யதிராஜ விம்சதி' என்ற நூலை சம்ஸ்கிருதத்தில் இயற்றியிருக்கிறார்.

கிருஷ்ணானந்தர் என்பவர் மாமுனியை வாதுக்கு அழைத்தார். முனிகள் பகவத் கைங்கரியத்தைக் குலைத்துக் கொண்டு அவரிடம் வாதிட விரும்பவில்லை. வேடலப்பை என்ற தன் சிஷ்யரை அனுப்பினார். வேடலப்பை வாதிட வந்தவரின் குருவானபடியால் கிருஷ்ணானந்தர் மாமுனிவரின் பெருமையை உணர்ந்து வாதிடாமலேயே போய் விட்டார்.

காஞ்சி பிரதிவாதி பயங்கரம் அண்ணா, பட்டர் பிரான் முனிவரின் சிஷ்யர்களாயினர்.

ஆழ்வார் திருநகரியில் இருக்கும் போது அவரது எதிரிகள் சிலர் அவர் வீட்டுக்குத் தீயிட்டனர். தன் சுய உருவான பாம்பின் உருவத்தை எடுத்துக் கொண்டு ஜலதாரை வழியாக வந்து தப்பிவிட்டார் முனிகள். மடத்துக்குத் தீயிட்டவர்களை அவ்வூர் அரசன் தண்டிக்க முற்பட்டபோது மாமுனிகள் அவர்களை மன்னித்து விடுவிக்குமாறு செய்துவிட்டார்.

---

## ரஜன்

---

எறும்பியப்பா என்பவர் மாமுனிகளிடம் வெறுப்பு கொண்டிருந்தார். இவருடைய ஆராதனப் பெருமாளின் கதவு திறக்கமுடியாது போகவே பெருமாள் அவர் கனவில் தோன்றி மாமுனிவரை அலட்சியம் செய்த குற்றமே இதற்குக் காரணம் என்று உணர்த்தினார். எறும்பியப்பர் பின் முனிவரிடம் சேர்ந்து சிஷ்யரானார். இவர் முனிவரைக் குறித்து பல தோத்திரப் பாடல்கள் இயற்றியுள்ளார்.

# ஞானியாக வேண்டுமானால்....

ஓர் இளைஞன் ஒரு துறவியிடம் சென்று 'ஐயா! எனக்கு ஞானியாக வேண்டும் என்று வெகு நாளாக ஆசை. தாங்கள் அதற்கொரு வழி சொல்ல வேண்டும்' என்று கேட்டான். அதைக் கேட்ட துறவி விழுந்து விழுந்து சிரித்தார். சிரித்து முடித்த அவரை, சிரித்ததற்குக் காரணம் கேட்டான் இளைஞன். அதற்கு அவர், இன்னொரு துறவியின் பெயரைச் சொல்லி 'அவரிடம் போய்க் கேள்.' என்றார்.

இளைஞனும் அவர் குறிப்பிட்ட இன்னொரு துறவியைத் தேடிச் சென்றான். அவரிடம் நடந்ததைக் கூறினான். உடனே அவர், 'ஞானியாக விரும்பினால் நிறையப்படி. ஆசையை விடு' என்று கூறினார்.

உடனே இளைஞன், 'ஐயா! இவ்வளவு எளிய வழியைத் தானே சொல்லாமல் ஏன் என்னைத் தங்களிடம் அனுப்பினார்? மேலும், இதில் சிரிப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று கேட்டான்.

அதற்கு அவர், 'நிறையப் படிப்பவன் அறிவாளியாவானே யொழிய ஞானியாக மாட்டான். ஞானியாக விரும்புபவனுக்கு ஆசை இருக்கக் கூடாது. ஆகவேதான், ஞானியாக வேண்டும் என்ற 'ஆசை' உனக்கிருப்பதாகச் சொன்னதும் அவருக்குச் சிரிப்பு வந்திருக்கிறது.' என்றார்.

இதைக் கேட்ட இளைஞன், 'ஐயா! தாங்கள் சொன்ன பதில் மிகவும் பொருத்தமாக இருக்கிறது. ஆனால், அவர் சிரித்ததன் காரணம் இதுதான் என்று எப்படி நிச்சயமாய் அறிவீர்கள்?' என்று கேட்டான்.

'ஏனெனில், இதே கேள்வியைத்தான் நானும் அவரை முதலில் சந்தித்த போது கேட்டேன்' என்று பதில் வந்தது.

—டி. என். நந்தகோபால்-சென்னை.

## அரங்கனும் சிஷ்யரானார்

தென் திருவரங்கப் பெருமாள் தானே மாமுனிகளின் சிஷ்யராக வந்தார் என்பது இவர் வாழ்க்கையில் மிக முக்கியமான சம்பவமாகும்.

திருவாய்மொழிக்குச் சிறந்த வியாக்யானமாக அமைந்த ஈருமுப்பத்தாறுயிரப் படியின் ஆகும் பொருளை அரங்கன் இவர் வாயினால் கேட்க விருப்பித் தன் திருக்கோவிலின் முன் சொல்லும்படி கட்டளையிட்டான். அதுகேட்ட மாமுனிகள்,

நாமார் பெரிய திருமண்டபமார்
நம்பெருமான்
தாமாக வெம்மைத் தனித்தழைத்து
நீ மாறன்
செந்தமிழ் வேதத்தின் செம்பொருளை
நாளுமிங்கே
வந்துரை யென்றேவுவதே வாய்ந்து.

என்று பாடி மறுநாள் தொடங்கி ஓராண்டு பொருள்களைச் சிறப்பாக விளக்கி வந்தார். அவ்வாண்டில் பெருமாளின் நித்ய நைமித்ய திருவிழாக்களெல்லாம் நிறுத்தப்பட்டிருந்தன.

ஓர் ஆனிமாத மூல நன்னாளில் இப் பிரவசனம் சாத்துமுறை செய்வதாக நிச்சயிக்கப்பட்டு அது நடந்து வரும் போது ரங்கநாதன் சிறுவனாக அக் கூட்டத்தில் வந்து நின்று,

ஸ்ரீசைலேச தயாபாத்ரம் தீ
பக்த்யாதி குணார்ணவம்
யதீந்த்ர ப்ரணவம் வந்தே
ரம்ய ஜாமாதரம் முநிம்

என்று கைகூப்பி நின்று சொல்லி விட்டு மறைந்து விட்டான்.

இந்த சுலோகத்தைக் குறித்து மாமுனிகளின் சிஷ்யர்களான அஷ்டதிக்கஜாசாரியார்கள் (அவரது சிஷ்யர்கள் 8 பேர். வானமாமலை ஜீயர், திருவேங்கடராமானுஜர் ஜீயர். கோயில் அண்ணன், பட்டர்பிரான் ஜீயர் பிரதிவாதி பயங்கரம் அண்ணா, எறும்பியப்பா. அப்பிள்ளை, அப்புள்ளார்.) எண்மரும் வடமொழி சுலோகங்களிலும் தென்மொழி செய்யுள்களிலும் அமைத்துப்பாடியிருக்கிறார்கள். அந்நாள் முதல் ரங்கநாதரின் கட்டளையினால் இத்தனியன் பாசுரமே கோவில்களிலும், மடங்களிலும், மனைகளிலும் திவ்ய பிரபந்தத்தின் தொடக்கத் தனியனாக விளக்கி வருகிறது.

முன்புள்ள ஆசார்யர்கள் இயற்றிய நூல்கள் இருக்க தாம் புதிய நூல்கள் இயற்றுவதை மாமுனிகள் விரும்பவில்லை. ஆயினும் சிஷ்யர்களின் வேண்டுகோள், பகவத் ஆக்ஞை இவைகள் பேரில் ரத்னம் போன்ற சில அரிய நூல்களை வெளியிட்டார்.

வியாக்யானங்கள் அருளிச் செய்வதில் மணவாள மாமுனிகள் திறமை ஒப்புயர்வற்றது.

வைணவ சமயக் குரவர்களில் வடமொழியிலும் தென்மொழியிலும் சிறியனவும் பெரியனவுமாக நூல்கள் இயற்றினவர்கள் ஆழ்வார்களைத் தவிர ஏறக்குறைய இருபதின்மர் (உலகம் போற்ற நின்ற ஆசிரியர்கள்) மாமுனிகளுக்கு முற்பட்டவர்கள் தேறுவார்கள். அத்தனைபேருடையவும் நூல்களிலிருந்து, உரிய இடங்களில் உரிய வசனங்களை எடுத்து மேற்கோள் கொடுத்திருக்கும் அழகு அற்புதமானது. இதற்குமேல் மற்றோர் அதிசயம்—மேற்கோளை எடுத்துக்காட்டிவிட்டு 'என்கிறபடியே' என்று போய்விடாமல் அவற்றின் பொருளைத் தெரிந்து கொள்ளுவதற்கு வேறு வியாக்யானங்களைத்

தேட வேண்டாமல், அவ்விடங்களில் தமக்கே உரிய நடையில் விவரணமும் காட்டியருள்வது மிகப்பெரிய மாண்பு.

நம்மாழ்வார் திருவாய்மொழியில் துவளில் மாமணிமாடமோங்கு, உண்ணுஞ்சோறு பருகுநீர் முதலான சில பதிகங்களில் தம்முடைய பெருமையைத் தாமே வெளியிட்டுக் கொண்டவாறு போல மாமுனிகள் தாமும் ஆர்த்திப் பிரபந்தத்திலே,

"தென்னரங்கர் சீரருளுக்கிலக்காகப்
பெற்றோம்
திருவரங்கத் திருப்பதியேயிருப்
பாகப் பெற்றோம்
மன்னியசீர் மாறன்கலை யுணவாகப்
பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப்
பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழி
களுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவை பொழுது
போக்காகப் பெற்றோம்
பின்னையொன்றுதனில் நெஞ்சு
பேராமற் பெற்றோம்
பிறர் மினுக்கம் பொருமையிலாப்
பெருமையும் பெற்றோம்',

என்று அருளிச் செய்திருக்கிறார்.

பிள்ளை லோகாசார்யார் அஷ்டாதச ரகஸ்யம் என்ற பெயர் பெற்ற 18 ரகஸ்ய நூல்களை இயற்றியிருந்தார். அவருடைய சகோதரர் அழகிய மணவாளப் பெருமாள் நாயனுர் "ஆசார்ய ஹிருதயம்" என்ற ரகஸ்ய நூலை இயற்றியிருந்தார். வைஷ்ணவ உலகில் இந்நூல்களுக்கு மேற்பட்டது எதுவுமில்லை எனலாம். பிள்ளை லோகாசாரியார் இயற்றிய 18 ரகஸ்யங்களில் ஸ்ரீ வசன பூஷணம், தத்வத்ரயம், முமுக்ஷுப்படி என்ற மூன்று நூல்கள், அறிய வேண்டிய ரகஸ்யமெல்லாம் அடங்கி நிற்பன என்று கண்டு இவற்றுக்கு மாமுனிகள் வியாக்யானம் அருளிச் செய்தார்.

"ஆசாரிய ஹிருதயம்" என்பது மேல் குறிப்பிட்ட மூன்று ரகஸ்யங்களும் நாலாயிர திவ்ய பிரபந்த வியாக்யானங்களும் சேர்ந்து ஒரு வடிவு கொண்டதென அமைந்ததாதலின் அதற்கும் வியாக்யானம் இயற்றினர். இந்த நான்கு வியாக்யான நூல்களும் நான்கு வேதங்கள் எண்ணும்படி அமைந்துள்ளன.

இவரது உபதேச ரத்ன மாலையில்,

ஓராண் வழியாய்உபதேசித்தார்முன்னோர்
ஏரார் எதிராஜரின்னருளால் பாருலகில்
ஆசை யுடையோர்க்கெல்லாம்ஆரியர்காள்
கூறுமென்று பேசி வரம்பறுத்தார்பின்

என்ற பாசுரத்தின்படி இராமானுஜருக்கு ஓர் ஏற்றம் பிரசித்தமாக உள்ளது. அந்த இராமானுஜரே மணவாள மாமுனிகளாக அவதரித்தார்.

மாமுனிகளுக்கு பல பல தோத்திர நூல்கள் அக்காலத்திலேயே எழுந்தன. ஸ்ரீமந் வரவர முனிசதகம் என்று நூறுநூறு சுலோகங்கள் கொண்ட இரண்டு துதி நூல்கள் சம்ஸ்கிருதத்தில் தோன்றியது. ஒன்று எறும்பியப்பாவினுலும் மற்றொன்று பிரதிவாதி பயங்கராச்சாரியாராலும் இயற்றப்பட்டவை. பிள்ளைப் பெருமாளையங்கார் அஷ்டப் பிரபந்தங்களைப் போல அஷ்டதிக் கஜாசாரியார்கள் என்று பெயர் பெற்ற எட்டுப் பேர்கள் எட்டு பிரபந்தங்களை இயற்றினர். எறும்பியப்பா என்பவர் வடமொழி நூலைத்தவிர வரவர முனி காவியம், வரவரமுனி சம்பு, வரவர முனி கர்ணும்ருதம் முதலிய பல துதி நூல்களையும் இயற்றினுர்.

மணவாளருக்கு 'விசதவாக் சிகாமணி' என்ற விருது உண்டு. இது இவருக்கு மட்டுமே தகும். கூறினது கூறல், மயங்க வைத்தல், நலிந்து பொருள் கொள்ள வைத்தல், இன்னது சொல்லப்பட்டது என்று தெரியாதபடி பேசி வைத்தல், பிறர்மனம் நோவப்பேசுதல், வீண் பேச்சு வளர்த்தல், முன்னோர் மொழிந்த முறைகளுக்கு மாருகப் பேசுதல் ஆகிய குற்றங்குறை மாமுனிகளின் ஸூக்திகளில் காண முடியாது.

பல ஆசார்யர்கள் திவ்ய பிரபந்தத்திற்கு வியாக்யானங்கள் இயற்றியிருந்த போதிலும் 'ஸூத்ரங்கள்' என்னும் வகையிலே அமைந்த இத்தகைய நூல்களுக்கு வியாக்யானமியற்றியவர் வைஷ்ணவ உலகில் மாமுனிகளைத் தவிர வேறுயாருமில்லை.

இராமானுஜரிடமுள்ள தன் ஆருத பக்தியை 'ஆர்த்தி பிரபந்தம்' என்ற நூலில் வெளியிடுகிருர். அதில் ஒரு அருமையான பாடல்,

தென்னரங்கர் சீரருளுக்கு இலக்காகப்
பெற்றோம்
திருவரங்கத்திருப்பதியிலே இருப்பாகப்
பெற்றோம்
மன்னிய சீர் மாறன் கலை உணவாகப்
பெற்றோம்
மதுரகவி சொற்படியே நிலையாகப்
பெற்றோம்
முன்னவராம் நங்குரவர் மொழி
களுள்ளப் பெற்றோம்
முழுது நமக்கவைப் பொழுது போக்
காகப் பெற்றோம்
பின்னை யொன்று தனில் நெஞ்சி
பேராமற் பெற்றோம்
பிறர் மினுக்கம் பெருமையிலாப்
பெருமையும் பெற்றோமே.

தன்னைப்பற்றி அவர் பெருமையாகப் பாடிக்கொண்டது இந்த ஒரு பாடலேதான்.

அமுதனரின் இராமானுஜ நூற்றந்தாதி அருளாளப் பெருமாள் எம்பெருமானுரின் ஞான ஸாரம், பிரமேய ஸாரம் இவற்றுக்கும் உரை எழுதியிருக்கிருர். இவருடைய திருவாராதனக் கிரமம் பூஜைக்குரிய நூலாகும்.

வைணவத் திருப்பதிகளில் தினமும் முடிவில்,

"அடியார்கள் வாழ்க
அரங்கநகர் வாழ்க
சடகோபன் தண் தமிழ்நூல் வாழ்க
கடல்சூழ்ந்த மண்ணுலகம் வாழ்க
மணவாள மாமுனியே இன்னும் ஒரு
நூற்றாண்டிரும்"

என்பர். நாமும் அவ்வாறே கூறி முடிப்போம்.

நன்றி : "ஸ்ரீ வைஷ்ணவ ஆசாரியர்கள் வைபவம்"

உ



ஓம் ஸ்ரீ மாத்ரே நம:

# பொது மக்களுக்கோர் அரிய நற்செய்தி

**ஸ்ரீ காஞ்சி ஜகத்குரு ஸ்ரீ ஜெயேந்த்ர சரஸ்வதி** ஸ்வாமிகள், திருமுருக கிருபானந்த வாரியார் மற்றும் பல மஹான்களால் ஸ்ரீ முகமும் **ஆசியும் பெற்று நவசக்தி** நிலையத்தாரால் உருவாக்கப்படும் பூஜைக்குரிய தெய்வீக சாதனங்கள்.

| எண் | யந்த்ரங்களின் பெயரும் அதன் பலனும் | விலை ரூ விபரம் | எண் | யந்த்ரங்களின் பெயரும் அதன் பலனும் | விலை ரூ விபரம் |
|---|---|---|---|---|---|
| 1. | ஸ்ரீ சக்கர மகாமேரு பஞ்சலோகம் $4\frac{1}{2} \times 4\frac{1}{2}$ cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 350/= | 10. | கண் திருஷ்டி ஒருபுறம் மறுபுறம் சுதர்ஸன டாலர் கண் திருஷ்டியால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி எதிரிகளிடமிருந்து பாது காக்க வல்லது | 65/= |
| 2. | ஸ்ரீ மஹா கணபதி 8 × 8 cm. எந்தக் காரியமும் தடையின்றி நடக்க | 130/= | 11. | ஸ்ரீசக்கரம் ஒருபுறம் மறுபுறம் ஸ்ரீ காமாக்ஷி டாலர் அம்பாள் கடாக்ஷத்தை ஏற்படுத்தி சிரமங்களை நீக்க வல்லது. | 65/= |
| 3. | ஸ்ரீ மஹா லக்ஷ்மி மஹா யந்த்ரம் 24 × 24 cm. 300 ஆண்டுகளுக்கு லக்ஷ்மி கடாக்ஷத்தை ஏற்படுத்தி நிலைத்திருக்கச் செய்யும் | 1100/= | 12. | ஸ்ரீ காமாக்ஷி ஒரு புறம், மறுபுறம் தனாகர்ஷண டாலர் அம்பாள் கடாக்ஷமும் பொருள் வரவும் தரவல்லது. | 65/= |
| 4. | ஸ்ரீ சக்கரம் 8 × 8 cm. அனைத்து தெய்வங்களும் இதில் அடங்கியது. | 130/= | 13. | ஸ்ரீ காமாக்ஷி மாங்கல்ய பாக்ய டாலர். அம்பாள் கடாக்ஷமும், பெண்கள் தீர்க்க சுமங்கலியாக இருக்கவும், கணவனுக்கு அதிர்ஷ்டத்தை உண்டாக்க வல்லது. | 65/= |
| 5. | சர்வ ஜன மன, தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீ மஹா சுதர்ஸனம் 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத்தில் விருத்தி அடையவும், லக்ஷ்மி கடாக்ஷம் பணவரவுக்கும், எதிரிகள் பொறாமை இவைகளை நீக்கி சுபீட்க்ஷத்தை உண்டு பண்ணும். | 1650/= | 14. | விவாகப் ப்ராப்தி டாலர் தடைப்பட்டு வந்த திருமணம் தடையின்றி நடக்கும். | 65/= |
| 6. | சர்வ ஜன மன தனாகர்ஷணம், ஸ்ரீ சாம்ராஜ்ய லக்ஷ்மி, ஸ்ரீ சுதர்ஸனம், 8 × 24 cm. மேற்கண்ட பலனைத் தரவல்லது. | 450/= | 15. | ஸ்ரீ சக்கரம் லக்ஷ்மி பீஜம் டாலர் அம்பாள் கடாக்ஷத்தை நிலைத்திருக்க செய்யவல்லது | 65/= |
| 7. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா, 16 × 48 cm. மூன்று யந்த்ரங்கள் சேர்ந்து வியாபாரத் தலத்திலோ, வீட்டிலோ நவக்கிரக தோஷங்களை நீக்கி எதிரிகள் இல்லாமல் செய்யவும், பில்லி, சூன்யம், ஏவல்களை நீக்கி லக்ஷ்மி கடாக்ஷம் தரவல்லது | 1650/= | 16. | கண் திருஷ்டி படம் வீட்டிலும் வியாபார தலத்திலும் வாகனங்களிலும் வைப்பதால் கண் திருஷ்டி தொல்லைகளை நீக்கி விபத்துக்களை தடுத்து காப்பாற்ற வல்லது. | 65/= |
| 8. | சூலினி, சரபேஸ்வரர், ப்ரத்யங்கிரா 8 × 24 cm. மேற்கண்ட பலன் தரவல்லது | 450/= | 17. | தத்தாத்ரேயர் யந்த்ரம் கண் திருஷ்டி பொறாமை துர்தேவதைகளால் ஏற்படும் தொல்லைகளை நீக்கி காப்பாற்ற வல்லது. 12 × 12 cm. | 150/= |
| 9. | ரசமணி ஒன்றின் விலை அளவின் படி ரூ.250/= ரூ.350/= ரூ.500/= மனதை ஒரு நிலைப்படுத்தி சர்வ கார்ய சித்தி தரவல்லது. சுகபோக பாக்கியங்களை தரவல்லது. | | 18. | இன்னும் பலவிதமான யந்த்ரங்களும், கிராம தேவதைகளுக்குரிய சகல யந்த்ரங்களும் உள்ளன. டாலர்கள் அனைத்தும் சுத்த வெள்ளியால் செய்யப்பட்டது. | |

கோவில்களுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிராம தேவதைகளுக்கு வேண்டிய சகல யந்த்ரங்களும் கிடைக்கும். ஒன்றின் விலை ரூ.105/= வெளிநாட்டுக்கு 25% அதிகம். விலைப்பட்டியலுக்கு 0.50 பைசா தபால் தலையுடன் கீழ்கண்ட விலாசத்துக்கு விண்ணப்பிக்கவும். காஞ்சிப் பரமாச்சாரியாள் அனுக்கிரகத்துடன் புவனேஸ்வரி அம்பாளின் திரு உருவப்படம் 30 × 20 (இஞ்ச்) விலை ரூ.15/= விற்பனைக்கு வந்துள்ளது. வியாபாரிகளுக்கு தனிச் சலுகை உண்டு. ஓவியர் K.R.V. சர்மா தீட்டியது. மேற்கண்ட யந்த்ரங்களின் பலன்களை ஓரளவுதான் பத்திரிக்கையில் எழுத முடியும்.



## ஸ்வாமிஜி ஸ்ரீ முருகபூஷணம்

ஸ்ரீ வித்யா உபாசகர் & தலைவர், நவசக்தி நிலையம்
153, லாயிட்ஸ் ரோடு (ஸ்டேட் பேங்க் எதிரில்)
கோபாலபுரம் - சென்னை 600 086
கடை போன் - 472013
மாமேரு டிரஸ்டு வீடு - 861254

"லோகாஸ் சமஸ்தாஸ் சுகினோ பவந்து"

# நாஸ்திக வாதம்

திரு. லா. ஸ்ரீநிவாஸன்,
புதுதில்லி.

சரீரத்தைத் தவிர ஆத்மா என்று ஒன்று உண்டென்றும், நமது பூர்வ கர்மங்கள் நமக்கு நன்மை தீமைகளைப் பயக்குகின்றன என்றும், முன் கர்மங்களுக்குத் தக்கபடி நாம் பலவித ஜன்மங்களை அடைகிறோம் என்றும், பகவான் ஒருவன் உளனென்றும், அவன் ஸர்வஜ்ஞன், ஸர்வ சக்தன், அவன் நம் கர்மங்களுக்குத் தகுந்தபடி பலன்களை அளிக்கிறான் என்றும், சாஸ்திரங்கள் அவனுடைய கட்டளைகள், அவற்றை மீறினால் நாம் தண்டிக்கப்படுவோம் என்றும் நம்புகிறவர்கள் ஆஸ்திகர்கள் எனப்படுவர். அதற்கு மாறான கொள்கைகளையுடையவர்கள் நாஸ்திகர்கள் ஆவார்கள்.

ஆயினும் யாவருக்கும் எல்லா ஸமயங்களிலும் தங்கள் கொள்கைகளில் ஆணித்தரமான விச்வாஸம் இருப்பதில்லை. ஆகையால் சில ஸமயங்களில் கொடிய துக்கங்கள் அல்லது விபத்துகள் ஏற்படும்போது அவர்கள் நம்பிக்கைகள் குலைகின்றன. அப்போது சிலர் தற்சமயமாகவோ அல்லது நிரந்தரமாகவோ நாஸ்திகர்களாக மாறுகின்றனர். இவ்வித உதாஹரணங்களை நாம் வாழ்க்கையில் ஆங்காங்கு கண்டே வருகிறோம்.

இக்காலத்தில் பலர் நாஸ்திகர்களாக இருப்பதில் பெருமை கொள்கின்றனர். பகுத்தறிவைக் கொண்டு சிந்திப்பதை உயர்த்தியும் தாங்கள் மூட நம்பிக்கை என்று நினைப்பவற்றைக் கண்டித்தும் அவர்கள் வாதம் செய்கின்றனர். ஆயினும் இது புதிதல்ல. வெகு காலமாக, தொன்று தொட்டே உள்ளதாகும்.

நமது தேசத்திலுள்ள மதங்களில் சார்வாகம் என்பதும் ஒன்று. இது நாஸ்திகத்தைத் தவிர வேறல்ல. இதை ப்ருஹஸ்பதி ஏற்படுத்தினார் என்பர். மற்ற மதங்களைப் போல் இதற்கும் இதன் குறிக்கோள்களைக் கொண்ட ஸூத்ரங்கள் உள்ளன. ஆயினும் இதைப் பின்பற்றியவர் வெகு சிலரே என்று தெரிய வருகிறது. பேராசிரியர். P. N. ஸ்ரீநிவாஸாசாரியார் கூறுவது போல சிந்திக்க மிகவும் மறுப்பவனே சார்வாகனுவான். ஆகவே இம்மதம் கண்டிக்கவும் தகுதியற்றது என்று உயர்ந்த சிந்தனையாளர்கள் கருதினர். உதாஹரணமாக, ப்ரஹ்ம ஸூத்ரம் இரண்டாவது அத்யாயம் வேதாந்தத்தைத் தவிர்ந்த மற்ற மதங்களை வாதங்களைக் கொண்டு கண்டிக்கிறது. ஆனால் அது சார்வாகத்தைப் பற்றிப் பேசக்கூட இல்லை. இதற்கு ஆசார்யர்கள் சார்வாகம் கூறி மறுக்கவும் தகுதியற்றது என்றே காரணம் கூறுகின்றனர்.

சார்வாகன் கடவுள் இல்லை என்கிறான். மாத்யமிக பௌத்தன் உண்மையில் எதுவுமில்லை, சூன்யம் ஒன்றே உள்ளது என்கிறான். இவன் மதப்படி உண்மையை அறியத்தக்க ஸாதனமுமில்லை (ப்ரமாணம்), அறியத்தக்க உண்மையும் (ப்ரமேயம்) இல்லை. எல்லாம் பொய். ஆகவே வேதம், அதன் மூலம் அறியப்படும் ஈச்வரன், அவன் ஆட்சிக்கு உட்பட்ட உலகம் ஆகிய யாவையும் வெறும் தோற்றங்களே, உண்மையல்ல. இம்மதத்தை ப்ரஹ்ம ஸூத்ரம் 2-2-30 இவ்விதம் மறுக்கிறது. 'மாத்யமிகன் மதமும் சரியல்ல, ஏனெனில் அது முழுதும் பொருத்தமற்றது.' அது எவ்விதம் பொருத்தமற்றது என்பதை பகவத் இராமாநுஜர் ஸ்ரீபாஷ்யத்தில் அந்த ஸூத்ரத்தின்கீழ் விளக்கியுள்ளார். சங்கரரும் மாத்யமிக மதத்தைக் கண்டித்துள்ளார்.

மாத்யமிகன் ஒரு ப்ரமாணத்தையும் (உண்மையை அறிய உதவும் ஸாதனத்தையும்) ஒத்துக்கொள்ளவில்லை. சார்வாகனோவென்றால் ப்ரத்யக்ஷம் அல்லது ஐங்கருவிகளால் உண்டாகும் அறிவை மட்டும் ஒப்புக்கொள்கிறான். அதை ஆதாரமாகக் கொண்ட அநுமானத்தையும், ஆப்த வாக்யம் போல் நம்பத்தக்க சப்தம் அல்லது வேதத்தையும் ஒப்புவதில்லை. மாத்யமிகன் யாவும் பொய் என்பான். சார்வாகன் கடவுள் இல்லை, பாப புண்யங்கள் கிடையாது என்பான். ஆகையினால் சார்வாகனை மாத்யமிகனுக்குத் தம்பி எனலாம். ஆகவே, மாத்யமிகனை மறுத்ததாலேயே ப்ரஹ்மஸூத்ரம் சார்வாகனையும் அவன் பெயரையிடாமல் மறுத்ததாகவே கொள்ளலாம். இப்போது இராமாநுஜரின் விளக்கத்தைக் கவனிப்போம்.

மாத்யமிகன் கூறும்படியான 'இல்லாமை' என்பது இருக்க முடியாது. ஏனெனில் உலகில் 'இருத்தல்' 'இல்லாமை' என்ற இரண்டும், அவற்றைப் பற்றிய அறிவும், உள்ள ஒரு வஸ்துவின் வெவ்வேறு நிலைகளையே குறிக்கின்றன. 'இல்லாமை' என்று ஒன்று தனியாகக் கிடையாது.

உதாஹரணமாக மண்ணால் செய்யப்பட்ட ஒரு குடத்தை எடுத்துக் கொள்வோம். குடம் என்பது பெருத்த வயிறும் கழுத்துமான உருவம் கொண்ட மண்ணாலான ஒரு பொருள். ஆக, 'குடம் இருக்கிறது' என்ற சொல் வழக்கு 'கழுத்தும் வயிறுமான உருவுடன் ஒரு பொருள் இருக்கிறது' என்பதைக் காட்டுகிறது. அடுத்தாற் போல் 'குடம் இல்லை' என்ற சொல்வழக்கை எடுத்துக் கொள்வோம். குடம் இருக்கும் போது

## முழுக்கில் தீரும் அழுக்கா இது?

பட்டர் திருக்கோட்டியூரில் எழுந்தருளியிருந்தபோது அங்குத் தெற்காழ்வான் என்றும், கோளரியாழ்வான் என்றும் இருவர் நட்புடன் வாழ்ந்து வருவதைக் கண்டார். கோளரியாழ்வான் ஆசார சீலன். தெற்காழ்வான் பரம அப்பாவி. ஒரு நாள் தெற்காழ்வானை நோக்கி கோளரி ஆழ்வான் ஒரு கேள்விக் கணையைத் தொடுத்தான் 'அருமை நண்பனே! இன்று புண்ணிய தினம் ஆயிற்றே, இன்றாகிலும் ஆற்றில் நீ ஒரு முழுக்கு போடலாமே?'

தெற்காழ்வான் தெளிவாக விடை கொடுத்தான். 'அந்தோ! என்னுடைய பாவம் திருக்கோட்டியூர் பெருமாளுடைய திருக்கையிலுள்ள திருவாழியாலேதான் தீரும்! முழுக்கால் ஒழிக்கும் அழுக்கு அல்ல அது!'.

இச்சொற்கள் பட்டருடைய செவியில் பாய்ந்தது. 'ஆ! ஆ! இவனை அஞ்ஞானி என்று எண்ணியிருந்தோமே, அது எவ்வளவு தவறு? இவனுக்கு பெருமாளிடத்தில் எவ்வளவு திட நம்பிக்கை! எவ்வளவு திட பக்தி!' என்றுகூறி அவர் மெய்யுருகிப் போனாராம்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

'குடம் இல்லை' என்று சொல்ல முடியாது. ஆகவே, மண் உருண்டையிலிருந்து குடம் உண்டாவதற்கு முன்னமோ, அல்லது குடம் உண்டாகி உடைந்து போன பிறகோதான் இம்மாதிரி 'குடம் இல்லை' என்று சொல்லலாம். முன்பு உண்டு என்று சொல்லப்பட்ட பொருளின் இருப்புதான் வேறொரு வகையில் இங்கு 'இல்லை' என்ற சொல்லாலும் சொல்லப்படுகிறது. முன்பு 'உண்டு' என்று சொன்னபோது அந்தப் பொருள் வயிறும் கழுத்துமான உருவத்துடன் இருந்தது என்று சொல்லப்பட்டதாயிற்று. இப்பொழுது குடம் உண்டாவதற்கு முன்னம் 'குடம் இல்லை' என்றால், 'முன்பு உண்டு என்று சொல்லப்பட்ட பொருள், முற்கூறிய வயிறும் கழுத்துமான உருவமின்றி வேறொரு வகையில் மண் உருண்டை உருவத்தில் இருக்கிறது' என்பதே கூறப்பட்டதாகிறது. இவ்வாறே குடம் உண்டாகி உடைந்து போன பிறகு 'குடம் இல்லை' என்றால், வயிறும் கழுத்துமான உருவமின்றி ஓட்டாஞ்சல்லிகள் உருவத்தில் அந்தப் பொருள் இருக்கிறது என்பதையே காட்டுவதாகிறது. 'இல்லை' என்ற சொல் 'இங்குக் குடம் இல்லை' என்றால் வேறோரிடத்தில் இருப்பதாகவே சொல்லப்பட்டதாகிறது. 'இப்பொழுது குடம் இல்லை' என்றாலும், வேறொரு காலத்தில் குடம் இருந்ததாகவே கூறப்பட்டதாகிறது. ஆக 'குடம் இல்லை' என்றால் அது இப்போது இல்லை, இங்கு இல்லை, வயிறும் கழுத்துமான உருவத்தில் இல்லை என்று மட்டும் ஆகுமே தவிர, அது எங்கும் எப்போதும் இல்லை, வேறு உருவத்திலும் இல்லை என்று கூறியதாகாது. ஆக, குடம் வேறு இடத்திலோ, வேறு ஸமயத்திலோ, வேறு உருவத்திலோ உள்ளதாகவே கூறப்பட்டதாகிறது. அது எவ்விதத்திலும் இல்லை எங்குமில்லை எப்போதுமில்லை என்று சொல்லப்பட்டதாகாது. வேறு விதமாகக் கூறுவதானால், இருக்கிறது அல்லது இல்லை என்பது உண்மையில் உள்ள ஒரு வஸ்துவின் வெவ்வேறு நிலைகளையே குறிக்கிறது.

இதே போல், 'உலகம் அனைத்தும் உண்டு' என்றால் உலகில் எல்லாப் பொருள்களும் ஸ்தூல உருவில் (தற்போது காணப்படும் வகையில்) இருக்கின்றன என்பது பொருள். அவ்வாறே 'உலகம் அனைத்துமில்லை' என்றால், ஸ்தூல உருவைவிட்டு அவை ஸூக்ஷ்ம உருவத்தில் உள்ளன என்பதே பொருள். இதனால் 'ஸர்வமும் சூன்யம்' என்று சொல்லும் ப்ரதிவாதியும் ஒரு வகையால் உலகப் பொருள்களின் உண்மையையே(இருப்பையே) ஸ்தாபிக்கிறான். ஆக, ஸர்வ சூன்ய வாதம் அல்லது கேவலம் இல்லாமை என்பது ஒரு காலும் ஸித்திக்காது.

மேலும், ஒன்றுமில்லை என்பதை ஓர் ப்ரமாணத்தின் மூலமே நிலை நாட்ட வேண்டும். அவ்விதம் செய்த மாத்யமிகன் அந்த ப்ரமாணத்தின் உண்மையை ஒத்துக் கொள்ளாமல் போக முடியாது. அப்போது யாவையும் பொய் என்ற அவனது கக்ஷி அழிந்து விடுகிறது. இவ்விதம் அவனது மதம் தனது கொள்கைகளிலும் அவற்றை நிரூபிப்பதிலும் முழுமையும் பொருத்தமற்றதாகிறது.

மேற்கூறிய பகவத் இராமாநுஜரின் வாதம் நம்மாழ்வாரின் திருவாய்மொழியை ஆதாரமாகக் கொண்டது. அழகிய மணவாளப் பெருமாள் தமது 'ஆசார்யஹ்ருதயம்' என்ற நூலில் 'பாஷ்யகாரர் இது கொண்டு ஸூத்ர வாக்யங்களை ஒருங்க விடுவர்' என்று அறுபத்தைந்தாவது சூர்ணையில் இதைக் காட்டியுள்ளார். நம்மாழ்வாரின் பாசுரம் வருமாறு:

உளனெனில் அவனுருவம் இவ்
வுருவுகள்
உளனலனெனில் அவனருவம் இவ்
வுருவுகள்
உளனென இலனென இவை குண
முடைமையில்
உளனிரு தகைமையோடு ஒழிவிலன்
பரந்தே.

இதன் பொருள்: ஈச்வரன் உண்டென்று வைதிகர்கள் சொல்வது போல் சொன்னாலும், ஈச்வரன் இல்லை என்று நாஸ்திகர்களின்படி சொன்னாலும், ஈச்வரன் உண்டு என்பதாகவே தேறும். உளனென்றும் இலனென்றும் சொல்லப்படுகிற அஸ்தித்வ நாஸ்தித்வங்களை ப்ராகாரமாக உடையவனாகும் தன்மையினாலே உருவமுடையனவாயும் உருவமில்லாதன வாயும் இருக்கின்ற உலகப் பொருள்கள் யாவும் அப்பெருமானுக்கு ஸ்தூல சரீரங்களும் ஸூக்ஷ்ம சரீரங்களுமாம். ஈச்வரன் இரண்டு தன்மையோடும் (அதாவது ரூபியும் அரூபியுமான ஸ்தூல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சங்களை வடிவாகக் கொண்டு) எல்லாக் காலங்களிலும் எல்லா இடங்களிலும் உள்ளவனாகவே ஸித்திப்பன்.

'ஈச்வரன் இல்லை' என்ற நிரீச்வர வாதம் இப்பாட்டால் கண்டிக்கப்படுகிறதேயன்றி ஸர்வ சூன்ய வாதம் நிரஸிக்கப்படவில்லை என்று இங்குச் சிலர் கேட்பர். உண்மையில் ஸர்வ சூன்ய வாதமே இங்கு மறுக்கப்படுகிறது. ஸர்வமும் சூன்யம் என்ற வாதத்தில் ஈச்வரனுடைய சூன்யத்வமும் அடங்கியதாதலால் அதை மறுத்து 'ஈச்வரன் உளன்' என்று ஸ்தாபித்துவிட்டால், ஈச்வரன் தானும் உலகத்தைத் தனது விபூதியாக உடையவனாகையால், அவ்விதத்தில் ஸகலமும் உள்ளதாக ஸ்தாபிக்கப்பட்டு விடுகிறது என்பது ஆழ்வார் திருவுள்ளம். ஒரு மனிதன் உளனாக ஏற்படும்போது, செவி, வாய், கண், மூக்கு, உடல் முதலான உறுப்புகளோடுகூடியே ஏற்படுவது போல், எம்பெருமான் உளன் என்று ஏற்படுமிடத்தும் சேதநா சேதநங்களாகிற சரீரத்தோடுகூடியே ஏற்பட வேண்டுதலால் எம்பெருமானுடைய உண்மையை ஸாதிக்குமளவே சூன்யவாத கண்டனத்திற்குப் போதுமாயிற்று.

நாம் 'ஸர்வேச்வரனை எம்பெருமான் உளன்' என்று சொல்லுகிறோம். 'ஈச்வரன்' என்றசொல் 'நியமிப்பவன், நடத்துபவன்' என்றால் 'எதை?' என்ற கேள்வி உடனே பிறக்கும். அந்த கேள்விக்குப் பதிலாக, உலகமனைத்தையும் நடத்துபன் 'ஸர்வேச்வரன்' என்று அவன் ஆட்சிக்கு உட்பட்ட பொருளையும் சேர்த்துச் சொல்ல வேண்டும். ஆக, 'ஈச்வரன் உண்டு' (நடத்துபவன் உண்டு) என்றால் எம்பெருமானுடைய இருப்பு (ஸத்பாவம்) ஏற்படுவது போல உலகின் உண்மையும் (இருப்பும்) கூறாமலே கூறப்பட்டதாகிறது.

ஒருவனைத் தந்தை என்கிறோம். அவன் பிள்ளை பெற்றிருந்தால்தானே தந்தை என்ற பெயர் அவனுக்குப் பொருந்தும்? ஆக 'தந்தை' என்ற பெயர் காரணமாகவே அவனுக்குப் பிள்ளை உண்டு என்பதும் தனித்துக் கூறாமலே கிடைக்கிறதல்லவா? அது போல்தான் ஸர்வேச்வரன் விஷயத்திலும். ஆள்வதற்கு ராஜ்யம் இல்லையேல் ஆள்பவன் (ராஜா) என்ற பெயர் எப்படி நிலைக்கும்? ஈசிதவ்யம் (ஆளுகைக்குரிய உலகம்) இல்லையேல் ஈச்வரனாவது எப்படி? ஆக, 'ஈச்வரனாக எம்பெருமான் உளன்' என்று நாம் கூறும்போது எம்பெருமானும், அவனது ஆட்சிக்கு உட்பட்ட ஸ்தூல உருவங்களையுடைய சேதநா சேதநப் பொருள்களாகிற உலகமும் இருப்பதாகவே கூறப்பட்டதாகிறது. பெயரையும் உருவத்தையும் பெற்று நிற்கையே சேதநா சேதநங்களுக்கு ஸ்தூல நிலையாகும். இத்தகைய பெயரும் உருவமுமின்றி நிற்கையே சேதநா சேதநங்களுக்கு ஸூக்ஷ்ம நிலையாகும். இத்தகைய ஸ்தூலப் பொருள்களும், ஸூக்ஷ்மப் பொருள்களும் எம்பெருமானுக்கு உடலாக (சரீரங்களாக) இருக்கின்றன. ஆக, 'ஈச்வரன் உண்டு' என்றால் 'ஸ்தூல சேதநா சேதநங்களை உடலாகக் கொண்ட எம்பெருமான் உண்டு' என்று சொல்லப்பட்டதாகிறது.

இந்த அர்த்தத்தைத்தான் ஆழ்வார் 'உளன் எனில் உளன்; அவன் உருவம் இவ்வுருவுகள்' என்கிறார். 'ஈச்வரன் உண்டு' என்றால் 'அவன் இருக்கிறான்' என்று சொல்லப்பட்டதாகிறது. அப்பொழுது அவனுடைய ஆட்சிக்கு உட்பட்ட அவனுடைய சரீரங்களான இவ்வுருவுகள், பெயரையும் உருவத்தையும் கொண்ட இந்த ஸ்தூல ப்ரபஞ்சமும், உள-இருக்கின்றன என்றபடி.

'உளன் அலன் எனில் அவன் அருவம் இவ்வுருவுகள்' ஈச்வரன் உளன் அலன், அதாவது 'ஈச்வரன் இல்லை' என்றால், முன்பு உளன் என்றபோது எந்த வகையில் ஈச்வரன் இருந்தான் என்று கூறப்பட்டதோ அவ்வகையில் அவன் இப்போது இல்லை என்பதே பொருள். ஆகவே, முன்பு ஸ்தூல சேதநா சேதநங்கப் பொருள்களை சரீரமாகக் கொண்டிருந்த ஈச்வரன் இப்பொழுது உருவமும் பெயருமின்றி ஸூக்ஷ்ம நிலையை யடைந்த சேதநா சேதநங்களை சரீரமாகக் கொண்டிருக்கிறான் என்றும், அவனுக்குச் சரீரங்களான சேதநா சேதநப் பொருள்கள் ஸ்தூல நிலையைவிட்டு ஸூக்ஷ்ம நிலையில் இருக்கின்றன என்றும் 'ஈச்வரன் இல்லை' என்ற வாக்யத்தால் சொல்லப்பட்டதாகிறது. ஆகையால், பெயரும் உருவமும் இன்றி இருக்கும் இப்பொருள்களைச் சரீரமாகக் கொண்டு ஈச்வரன் இருக்கிறான் என்று சொல்லப்பட்டதாகிறது, 'உளன் அலன்' என்ற வாக்யத்தால்.

இருக்கும் பொருளுக்கே இருப்பும் இல்லாமையும் ஆகிய இரண்டு தன்மைகளாகும். 'இல்லை' என்று சொன்னதனாலேயே எங்கும் இல்லை, எப்பொழுதும் இல்லை, எவ்விதத்திலும் இல்லை என்பது கூறப்பட்டதாகாது என்பதை 'உளன் என இலன் என இவை குணம் உடைமையில்' என்று மேலே கூறுகிறார் ஆழ்வார். இது ஏற்கனவே தெளிவாக்கப்பட்டுள்ளது.

'உளன் என்ற சொல்லாலும் இலன் என்ற சொல்லாலும் கூறப்பட்ட இரண்டு ஸ்வபாவத்தோடும் ஈச்வரன் உளன்ஆனான்' என்பதை மேலே 'உளன் இரு தகைமையோடு' என்று ஆழ்வார் அருள்கிறார். ஆக 'பரம வைதிகர்களான நாம் ஈச்வரனை 'உளன்' என்ற சொல்லால் ஸ்தாபிப்பது போல, 'ஒன்றுமே கிடையாது', 'ஸர்வமும் சூன்யமே' என்று சொல்கிற நாஸ்திகரான மாத்யமிகனும் 'இல்லை' என்ற சொல்லால் வேறொரு வகையால் ஈச்வரனது இருப்பையே ஸாதித்தவர்கள் ஆகிறார்கள்.

# மஹா தேசிகன் படைத்த சில முக்கிய நூல்கள்

மஹா தேசிகன் இயற்றியவை சுமார் நூறுக்கும் அதிகமான நூல்கள் உள்ளன. இச்சிறிய வியாசத்தில் சில முக்கியமான நூல்களை மட்டும் கவனிப்போம்.

ஸமஸ்கிருத நூல்களில் இவரது சமய நூல்களில் முக்கியமானது தத்துவ முக்தா கலாபம் (வடமொழி) என்ற ஸ்ரீ வைஷ்ணவ சித்தாந்தத்தை அருமையாக விளக்கும் நூல். ரஹஸ்ய திரயம்—வடமொழி தென்மொழிகளில், சான்றுகளை மேற்கொண்டு தமிழிலான ஸ்ரீவைஷ்ணவ சித்தாந்தத்தின் அடிப்படைத் தத்துவங்களைக் கொண்டது.

தமிழ் மொழியும், வடமொழியும் கலந்த மொழி நடைக்கு மணிப்பிரவாளம் என்று பெயர். இம்மொழியில் இவர் பல நூல்களை இயற்றினார். அதிகரண ஸாராவளி (வடமொழி) என்ற ஸ்ரீ பாஷ்யத்தின் விரிவுரைகள் இரண்டும் இவரது பாஷ்ய நூல்களில் காணலாம்.

இவர் வடமொழியில் யாதவாப்யுதயம் என்ற ஒரு காவியம் இயற்றினார். இது ஸ்ரீகிருஷ்ணனைப்பற்றிய சரிதம். இடையிடையே ஸ்ரீ பகவத் ராமானுஜரின் பிரபாவத்தை அறியும் பொருட்டுப் பல செய்திகளைப் புகுத்திருக்கிறார். அத்துடன் மஹாதேசிகன் தன்னுடைய கற்பனா சக்தியை வெளியிட்டு இருக்கிறார் என்ற சந்தேகம் ஏற்படுகின்றது.

ஹம்ஸ சந்தேசம் என்பது ஒரு தூது காப்பியம். இராமாயணத்தின் ஒரு நிகழ்ச்சியைத் தழுவி முழுதும் கற்பனையாக வடமொழியில் எழுதியிருக்கிறார். பூனைக் குட்டியின் முயற்சியில்லாமலே தாய்ப்பூனை அதனை எடுத்துச்செல்லும். அதுபோல பெருமாள் தானாகவே ஜீவன்களுக்கு அருள்புரிவார் என்ற மார்ஜார நியாயத்தை விளக்குவதே இந்நூலின் இலட்சியமாகும்.

ஸங்கல்ப ஸூர்யோதயம் ஒரு வடமொழி நாடகம். க்ரோதம், டம்பம், கோபம் போன்ற மனிதனின் குண தோஷங்களை நாடக பாத்திரங்களாக வைத்து, கற்பனா சக்தியால் எழுதினார். இது ஒரு கற்பனைச் சிகரமாக அமைந்துவிட்டது.

இந்தக் குணதோஷங்களைக்கொண்ட நாடக பாத்திரங்கள் மானிடனுக்குப் பலவிதமான புத்திமதிகளைத் தருகின்றன. க்ரோதம், டம்பம், கோபம் மனிதனை எவ்வளவு தாழ்த்தி விடுகின்றன என்றும், சாந்தம், சத்தியம் எவ்வளவு தூரம் மனிதனைத் தூக்கி விடுகின்றன என்றும் இந்த நாடகம் வெகு சிறப்பாக விவரிக்கின்றது.

முனி வாகனபோகம். இது தமிழில் படைக்கப்பட்ட நூல். திருப்பாணாழ்வார் இயற்றிய அமலனாதிப்பிரான் என்ற திவ்யப்பிரபந்த பாசுரத்திற்கு விரிவான உரையாகும். வெகு அழகான தமிழில் ஸ்ரீ மகாதேசிகன் படைத்திருக்கிறார்.

ஸ்ரீ தேசிகனின் ஸ்தோத்திரங்களில் திருமலை ஸ்ரீனிவாசப் பெருமானின் கல்யாண குணங்களில் 'தயை' என்னும் ஒரே ஒரு அருமையான குணத்தை மட்டும் விளக்கிடும் 'தயா சதகம்' என்ற நூல் நூறு ஸ்லோகங்கள் கொண்டுள்ளது. பகவானுடைய பாதுகையையும் அவனது ஒரே தேவியாகி=கற்பனை செய்து துதித்து ஒரே இரவில் எழுதிய 1000 சுலோகங்கள் கொண்ட நூலில் அவரது புலமை நன்கு விளங்குகின்றது. அதற்கு பாதுகா ஸஹஸ்ரம் என்று பெயரிட்டார். அதிக புகழ் பெற்ற நூல். சரணாகதியை உபாயகமாக ஏற்று அதைக் கடைபிடித்து மனிதன் ஜன்ம சாபல்யமடைய வேண்டிய வழிகளை முறையாகக் காட்டுகின்றார். இதே வழிகளை நியாஸதிலகம், நியாஸவிம்சதீ என்ற நூல்களும் காட்டுகின்றன. ரகு வீர கத்யம் தற்போது பிரபலமடைந்த நூலாக மதிக்கப்படுகின்றது.

ஸ்ரீ கிருஷ்ணனின் பரமபக்தரான குசேலரை (ஸுதாமா) என்பவரை குசேல முனிவர் என்ற பட்டத்தை அளித்து அவரைப் போற்றி வாழ்ந்தவர் நம் தேசிகன்.

இப்பேர்பட்ட மகான் ஒருவருடைய தயை-தாட்சண்யம் எதையும் எதிர் பார்க்காமல் உஞ்சி விருத்தி செய்து வாழ்ந்தார். இப்படிப்பட்ட மகானுக்கு நாம் எப்பொழுதும் அஞ்சலி செய்வோமாக.

**திரு. எம். கே. ஸ்ரீநிவாசன்,** B.A.,
சென்னை — 39.

## விண்ணப்பம்

தி. தி. தேவஸ்தான கோயில்களில் மற்றும் திருமலை ஸ்ரீ வேங்கடேஸ்வரா கோயிலில் நடைபெறும் ஆர்ஜித சேவைகளுக்காக அனுப்பப்படும் கட்டணத் தொகையினை தேசியமாக்கப்பட்ட வங்கிகளில் மட்டுமே பெறப்பட்ட 'டிமாண்ட் டிராஃப்ட்' (D. D) அல்லது 'பேஆர்டர்' (Pay order) மூலமாக அனுப்புமாறு பக்தர்கள் கேட்டுக் கொள்ளப்படுகிறார்கள். 'செக்' (Cheque)குகளை அனுப்பவதால் கால விரயமும், நிர்வாகச் சிக்கலும் மேலாண்மைக்கு ஏற்படுகின்றது என்பதைத் தெரிவித்துக் கொள்கின்றோம்.

# தாயின் தனிக்கருணை

"அன்பின் உருவே அறிவின் திருவே
இன்பப் பொருளே ஈகையின் கருவே
எண்ணற் கரிய எழிலார் பண்பே
கண்ணின் மணியாய் காப்பவள்
தாயே!"

அண்ட சராசரம் அனைத்தும் ஆக்கி அளித்து, ஆருயிர் யாவையும் காத்து, இன்ப துன்பம் யாவிலும் நிலைக் களனாய் நிற்பவள் தாய். ஈன்று உவந்து, ஈகையில் கலந்து, வாழ் வாங்கு வாழ வழிகாட்டுவது யாகும்.

"ஈன்ற பொழுதில் பெரிதுவக்கும் தன் மகனை
சான்றோன் எனக் கேட்டத் தாய்"

என்று வள்ளுவப் பெருந்தகை விளக்கினர். இதன் உட்பொருள் உணர்ந்து உவகை கொள்ளும்போது தாயின் தனிக் கருணை தெள்ளித்தின் விளங்கும்.

பிறந்த குழந்தைக்குத் தந்தையை அறிமுகப்படுத்தி, சொல்லினைப் பயிற்றுவிக்கும் முதல் தெய்வமாக அதாவது ஆசானாக அமைந்தவள் தாய். மாதா, பிதா, குரு இம் மூவருமே காணும் தெய்வமாக அமைந்து பேணும் பெருமை பெற் றனர் என்றாலும் முதனிலைப்படுத்தப் பட்டது தாயே! "தாயிற் சிறந்த தோர் கோயிலுமில்லை" என்பதை விளக்குமுகமாகவேதிரு அவதாரங்கள் தாயின் கருவிலே தோன்றி தத்துவங் கள் தந்த முறையினைக்காண்கின்றோம்.

ஆதிசங்கரர் ஸ்ரீ ராமானுஜர், மத்வர் போன்ற ஆச்சார்யர்களும் தாயின் வழியாகத்தோன்றிய அவ தாரங்கள் தானே! ஸ்ரீ ராமன், கண்ணன் அவதாரங்களும் தாய்க்குப் பெருமை தந்தவைகள்தான்.

வைணவ சாம்பிரதாயப்படி இறை வன் தாயின் மூலம் திரு அவதாரம் என்றால் சைவ சம்பிரதாயப்படி இறைவி ஏற்றதோ தாயின் மூலம் தன் அவதாரம். இதன் மூலம் தெளி வாக்கப்படும் நீதியாது? இறையம்சம் அவதாரம் தாயின் மூலமே நிகழ்வது. தாயே தனிப்பெருந் தெய்வம் என் பதுதான்.

கருணை வடிவாம் தாய். அன்பின் வடிவம் தாய், அறத்தின் பிறப்பிடம் தாய், இன்பமுறச் செய்பவள் தாய், தன் சுகம் மறந்து, தானீன்ற மழலை யின் சுகமே நினைந்து, உறக்கம் மறந்து, பால் நினைந்து ஊட்டி, பண் புற வளர்த்து கண்ணின் மணியெனக் காத்து, கலை பல கற்க ஊக்குவித்து, இறைப்பற்று ஏற்கச் செய்து, இன்பம் கொளச் செய்பவள் தாய்.

இதன் காரணம் பற்றியே நில மகள், பூமாதேவி என்று நாம் வாழும் மண்ணுலகினைத் தாய்மையின் சிறப் பாக்கி வணங்குகின்றோம். நீர் நிலை களையும் தாய்மையின் திருஉருவாக்கி கங்கை, யமுனை, சரஸ்வதி, காவேரி வையை எனும் பொய்யாக் குலக் கொடி என்ன அழைத்தப் போற்று கிறோம்.

தாய் நாடு என்போம் தாய் வீடு என்போம். அன்னையே அகிலத்தின் நாயகி என்போம். இச்சா சக்தி, கிரியா சக்தி என்ற இரு சக்திகளையும் பெண்மையாக்கி ஞான சக்தியான ஆண்மையுடன் இணைத்த பெருமை இந்து மதத்திற்கே உரியதாகும்.

மூன்று வயது பாலகனுக்கு அமுதப் பால் ஊட்டிய அன்னையின் அருள் கொண்ட திருஞான சம்பந்தர், "தோ டுடைய செவியன்" எனத் தொடங் கும் பதிகம் பாடினர். அன்னை அணி வது தோடு. அப்பன் அணிவது குழை. அர்த்தநாரியான ஈசனும் உமையும் காட்சி தந்தபோது தாயைத்தானே முன்னிலைப்படுத்தி னர் ஆளுடைப்பிள்ளையார்.

வசுதேவர்-தேவகிக்கு மைந்தனாகத் தோன்றிய கண்ணன் நான்கு கரங்க ளுடன் சங்கு சக்ரபாணியாய் குழந் தை வடிவில் காட்சி தந்தபோது கண் ணீர் சிந்திய தாய், கலங்கிக் கூறியது யாது? "தெய்வத் திருவுருவாய் தோன்றிய இச்செல்வத்தை கம்ஸன் அழித்துவிடுவானே" என்று ஏங்கிக் கூறி கண்ணீர் வடித்ததைச் சிந்திக்க வேண்டும். தெய்வமே திரு அவ தாரம் செய்துள்ளதை எண்ணவில்லை அந்தத் தாயுள்ளம். தீங்கு நேர்ந் திடக் கூடாதே என்று துடித்தது தூய தாயன்பு.

எந்த ஊரிலும் எந்த தெய்வத் திற்குக் கோயில் இல்லாவிடினும் அன்னைக்கென கோயில் அமையாது இருப்பதே இல்லை. காளி கோயில், திரோபதை அம்மன் கோயில் எனப் பலவாறு நாமங்கள் சூட்டினாலும் அன்னையின் அருள் அமைந்திட, ஆங்கே அற்புத வழிபாடு அன்னைக் கென அமைந்திருப்பது கண்கூடு.

பெண்களைக் கடவுளின் சக்தி என் பார்கள். அதுவே மாயா சக்தியும் கூட. எனவே இந்த இரண்டின் உரு வமே மகா சக்தி—பராசக்தி—ஆதிசக்தி எனப் போற்றப்படும். பெண் என் பவள் மனிதனின் நம்பிக்கைக்குரிய தோழி. வாழ்க்கையின் அருஞ் செல் வம். இறை சங்கல்பத்தின் பருப்

வெ. சுந்தரம் — பரமக்குடி.

# தி. தி. தேவஸ்தான சமய நூல் வெளியீடுகள்

## தமிழ்

| | ரூ. காசு. |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேச சுப்ரபாதம் (ஸ்தோத்ரம், ப்ரபத்தி, மங்களா சாஸனங்களுடன்) | 0—50 |
| 2. ஏழுமலே யாத்திரை — திரு. டி. கே. நாராயணன் | 0—75 |
| 3. அன்னமய்யா ஓர் அறிமுகம் டாக்டர். பொன். சௌரிராஜன் டாக்டர். கே. சர்வோத்தமன் | 1—00 |
| 4. பகவத் சந்தேசம் (தமிழாக்கம்) டாக்டர். பொன் சௌரிராஜன் | 0—50 |
| 5. இந்து சமயக் கையேடு (தமிழாக்கம்) அ. நடராஜன் | 1—50 |
| 6. நித்யாநுஸந்தானம் (வடகலே) | 4—00 |
| நித்யாநுஸந்தானம் (தென்கலே) | 4—50 |
| 8. சித்திரத்திருப்பாவை — பி. ஸ்ரீ. | 8—25 |
| 9. கண்ணன் பேசுகிறுன் —நஜன் | 0—50 |
| 10. சுவாமி பட்டினத்தார் டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு | 1—00 |

## சம்ஸ்கிருதம்

| | |
|---|---|
| 1. ஸ்ரீ வேங்கடேஸ்வரா அஷ்டோத்ர ஸகஸ்ரநாமம் | 0—62 |
| 2. அலங்கார ஸங்ரஹம் —சி. கே. பாஸ்கரராவ் | 16—00 |
| 3. கடோபநிஷத் —டாக்டர். கே. சி. வரதாசாரியார் —டாக்டர். டி. தாதாசாரியார் | 15—00 |
| 4. க்ரியாதிகாரா — தொகுத்தவர் : டாக்டர். எஸ். பி. ரகுநாதாசாரியா | 25—00 |
| 5. மார்க்கண்டேய ஸம்ஹிதா | 18—00 |
| 6. ப்ரஸ்னேபநிஷத் | 11—00 |
| 7. ஸ்ரீ வேங்கடேஸ்வர சுப்ரபாதம் | 0—12 |
| 8. சீதாராமாஞ்சநேயம் டாக்டர். டி. அர்க்கசோமயாஜி | 50—00 |
| 9. தத்வ சாங்க்யானம் —திரு. ஆர். ராமமூர்த்தி சர்மா | 2—00 |
| 10. பிரம்மசூத்ர பாஷ்யம்-தொகுதி - 1 திரு. —ஆர். ராமமூர்த்தி சர்மா | 30—00 |

மேற்படி நூல்களுக்கான தொகையை வங்கி டி. டி. அல்லது எம். ஓ. மூலமாக அனுப்பி பெற்றுக்கொள்ளலாம். வி. பி. பி. மூல மாக நூல்கள் அனுப்புதல் இயலாது. நூல்களுக்கு "உதவி செய லாட்சித் தலேவர்(எஸ்), நூல் வெளியீட்டுப் பிரிவு, தி.தி.தேவஸ்தானம், திருப்பதி" எனும் முகவரியுடன் ஆங்கிலத்தில் தொடர்பு கொள்ளவும்.

பொருள். சக்தியின் பிரதிநிதி. இல் லத்து லட்சுமியாய் விளங்கும் அவர் கள் இயற்கையாகவே பொறுமை, சகிப்புத்தன்மை பக்தி, பிரேமைஆகிய நிரம்பப்பெற்றவர்கள் ஆவார்கள்.

கற்பின் நிறைவே சக்தியின் உரு வாகித் தன்னேயும் காத்து தன் குடும் பத்தையும் காக்கும் பெருமை நிறைந் துள்ளதாகும். எளிமை, இரக்கம், பணிவு, சுறுசுறுப்பு, இனிய சுபாவம், உயர்ந்த தத்துவங்களின் மேல் கொள்ளும் பற்றுதல் இணேந்த பெண் ணிடம் நாணம் இயல்பாக அமைந் திருக்கும்.

உயர்வான சிந்தனேயும் துயர்போக் கும் தெய்வ பக்தியும் கொண்ட பெண்ணேத்தான் கிரகலெட்சுமி என்று போற்ற முடியும். அந்த இல் லத்தில் கல்விக் கடவுளான கலேமக ளும், செல்வத்திற்கதிபதியான லெட் சுமியும், காக்கும் கவசமாக வீரமும் வெற்றியும் தரும் மலேமகளும் வாசம் செய்து தாய்மையின் தூய்மைக்குத் துணே செய்வார்கள் என்பது உண்மை யன்றே?

மந்திரங்கள் யாவிலும் மிகச் சிறந் தது "காயத்ரி" மந்திரம். இந்த பவித்ரமான மந்திரமே விஸ்வாமித் திரர் போன்ற ராஜரிஷிகளே பிரம்ம ரிஷிகளாக்கியது. எல்லாக் கலேகளே யும் அளிக்கவல்ல கற்பகத்தரு. அந்த வேதமாதாவானவள் தன்னே வழி படும் பக்தர்களுக்கு சகல வளங்களும் தந்து உதவும் தாயானுள். பிரம்ம சூத்ரம், தர்ம சூத்திரங்கள் வர்ணித் துக் கூறுவதும் காயத்ரி தேவியின் தன்மைகளேத்தானே!

"கய" என்றுல் பிராணன் அல்லது வாக்கு முதலான பலன்கள். "கய"த் தைக் காப்பது காயத்ரீயாகும். "காயந்தம் த்ராயதே யஸ்மாத் காயத்ரீ தேனதத்யதே" என்பது தன்னேக் கானம் செய்பவர்களே அதா வது பஜனே பிரார்த்தனே, தியானம் மூலம் பக்தி செய்பவர்களேக் காப்பதே "காயத்ரீ" என்று சொல்லப்படுவ தாகும்.

## பகவான் வழங்கும் போனஸ்!

எம்பெருமான் பெயர்களாகிய கேசவன், ஸ்ரீதரன், இராமன், கோபாலன் போன்றவற்றையும் அவன் உகந்த ஊர்களாகிய ஸ்ரீரங்கம், திருமலை, திருவேங்கடம், சோலைமலை போன்ற பெயர்களையும் தம் பிள்ளைகளுக்கு இட்டு உய்வு அடையுமாறு பெரியாழ்வார் நமக்கு உபதேசிக்கின்றார். வெளிதேசம் சென்ற புதல்வனையே நினைத்து ஏங்கும் தந்தையைப் போல தன்னைப் பிரிந்து உழலும் சம்சாரிகளிடம் பகவான் மிகவும் பரிவு கொள்ளுகிறான். சேதனன் தன்னையறியாமல் செய்துவிட்ட ஏதேனும் ஒன்று இரண்டு நன்மைகள் கிடைக்குமா என்று அவன் சல்லடைப் போட்டு சலித்துப் பார்க்கிறான்! நன்கு கூறுகிறார் பிள்ளை உலக ஆசிரியர். என் ஊரைச் சொன்னாய்; என் பேரைச் சொன்னாய்; என் அடியாரை நோக்கினாய்; அவர் விடாயைத் தீர்த்தாய்; அவருக்கு நிழலைக் கொடுத்தாய்.' என்று சிலவற்றைத் தானே ஏறிட்டுக் கொண்டு கை தூக்கிவிட முன் வருகிறான். பகவத்துவேஷமில்லாத அனுகூலப் புத்தியை அளித்து மோக்ஷ பரியந்தமான பெரும்பலனைப் பாலித்து விடுகிறான்.

—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

பெண்மையால் பெருமை சேரும் என்னும்போது, பெண் துறவு கொள்ளவோ, இறை பூசை செய்யவோ இல்லற வாழ்வில் உள்ளவள் கணவனைத் தெய்வமாக வழிபடாமல் தெய்வத்தை வழிபடு என்றோ, கணவனே தெய்வம் என்று தெய்வத்தை வழிபடக்கூடாதென்றோ எந்த சாஸ்திர விதிகளும் கூறவில்லையே!

கணவனும் மனைவியும் இணைந்து இறை வழிபாடு நடத்த வேண்டும் என்ற உயரிய குறிக்கோளைக் காட்டவே கோயில்களில் ஆண்டுதோறும் திருக்கல்யாண வைபவங்கள், திருவிழாக்கள் முதலியன நடத்தப்படுகின்றன.

சம்சார சாகரத்தைக் கடக்க பக்தியே தோணி. இரு துடுப்புகளாக ஆண்மையும், பெண்மையும் அமைய வழி வகுத்தளிக்கும் முறைதான் இறை வழிபாட்டு முறைகள். கிரகஸ்தாசிரம தர்மம் ஆண், பெண் இருவருக்கும் பொதுவே. இவ்வழியில்தான் வளரும் சமுதாயமான மக்கட் செல்வங்கட்டு வழிகாட்டியாக அமைய முடியும். "தாயைப்போல பிள்ளை நூலைப்போல சேலை" என்ற பழமொழியும் தர்ம வழியில் வழிகாட்டியாகத் தாய் விளங்க வேண்டும் என்பதை வலியுறுத்துவதாகும்.

அவதார புருஷர்களான ஸ்ரீ ராமர், கிருஷ்ணர், சங்கரர், ராமானுஜர், மத்வர், மற்றும் புத்தர், ஏசு, முகம்மது போன்ற ஞானிகளும் தாயின் கருவில் உருவானவர்களே. பவித்ரம் நிரம்பிய இப்புருஷர்களையும் உலகுக்களித்த தாய்மார்கள் சக்தியின் வடிவானவர்கள் அல்லவா? சத்யவதிகளான அந்தத் தாய்மார்களின் குணநலன்களையும் அவர்கள் ஏற்ற பக்தி மார்க்கங்களையும் மேற்கொண்டு ஒழுகும் பெண்கள் பிரம்ம ஞானத்தைக் கற்றுக்கொள்ள சகல அதிகாரங்களும் உண்டு.

அறியாமை நிறைந்தவனுக்கு சாஸ்திரங்கள் தேவையில்லை. எப்போதும் எந்த நிலையிலும் பிரம்மத்தோடு ஒன்றியுள்ளவர்கட்கும் சாஸ்திரங்கள் தேவையில்லை. சத்தியத்தை, அறவழியைப்பற்றி நடக்கும் மற்றவர்க்கே சில தடைகள் ஆரம்பத்தில் வரலாம். இதை மனந்தளராமல் தாய் உபதேச வழியில், அன்னையாம் உத்தமத்தாய்மார்கள் நன்நெறிப்படி நடந்து சரஸ்வதி, லெட்சுமி, ஞானசொரூபி இவர்களின் அருள் பெறலாம்.

சங்கீத மும்மூர்த்திகளில் ஒருவரான ஸ்ரீ தியாகையர் பஜனை மூலம் இறைவனைத் துதித்தது யாவரும் அறிந்ததே. அவர் பூஜைக்கு, பஜனைக்கு உதவிய பெருமை அவர் துணைவியாரின் உயரிய பக்தியின் செயலன்றோ. ஆகவே ஸ்ரீ ராமச்சந்திரமூர்த்தி சீதா லெக்ஷ்மண சமேதராக அந்த அம்மையார்க்குக் காட்சி தந்தருளினர். அதன் பின்னர்தானே ஸ்ரீ தியாகையர் அக்காட்சியைக் காண முடிந்தது.

பதிவிரதா சிரோன்மணிகளாக, பக்தியின் மூலம் சக்தி நிரம்பியவர்கள் அன்னையவர்களே. சிவஸ்தலங்களில் நாயன்மார்கள் உருவங்கள் நின்ற கோலமிருக்க காரைக்கால் அம்மையார் மட்டும் அமர்ந்தகோலம் கொண்டுள்ளதைக் காணும்போதும், சிவனார் "தாயே" என அழைத்ததும் உமாதேவியாரிடம் "என் தாய் இவரே" என்று கூறியதும் தாய் எனப்படும் பேறு எவ்வளவு உயர்வானது என்று உணர்த்தும்.

துறவு பூண்ட ஆச்சார்யர்கள் தாயை வணங்குவர். ஆனால் தந்தைதான் ஆச்சார்யரான தனயனை வணங்குவார். தாயின் மேன்மைக்கு இதனினும் வேறு சான்றும் உண்டோ?

கண்ணனும் போரிலே சோர்ந்தது போல் சாய்ந்திருக்க, சத்யபாமாவையும் தன் புருவம் வளர்ந்ததுபோல் வில்லை வளைத்துப் போரில் வெற்றி கொண்டது எதைக் காட்டுகிறது? பெண்மையின் வீரம்தானே! தாயன்போடு தக்க வீரமும் உண்டென்று நாமறியும் நிகழ்ச்சி.

வீரத்தோடு நிறைந்த விவேகமும் ராமாயணத்தில் கைகேயி மூலமாக சூட்சும நிலையில் தெளிவுபடுத்தியுள்ளதாகவும் கொள்ளலாம்.

## அழைத்தால் வருவான் அழகன்

ஸ்ரீ ராமானுஜரின் ஆசார்யர் திருமலையாண்டான் என்பவர் திருமாலிருஞ்சோலை அழகர் கோயிலில் கைங்கர்யம் புரிந்து வந்தார். கோயிலில் நாள்தோறும் திவ்ய பிரபந்தம் நடத்தி வந்தார். கோயில் அடவி சூழ்ந்த இடத்தில் இருந்ததால் தினமும் காலையில் வந்து பகல் பூராவும் தங்கி கோயில் கைங்கர்யத்தை முடித்துக் கொண்டு இரவில் தன் திருமாளிகைக்குத் திரும்பி விடுவது வழக்கம். ஒரு நாள் இரவு வழக்கப்படி கோவிலைப் பூட்டிக் கொண்டு ஊருக்குப் புறப்பட்டார். தினமும் அவரது சிஷ்யன் தீவட்டிப் பிடித்துக் கொண்டு வருவான். இன்று அவன் தூங்கிவிட்டான். எனவே 'சுந்தரராஜா! சுந்தரராஜா!' என்று திருமலையாண்டான் தன் சீடனின் பெயரைக் கூறி அழைத்ததும் கோயிலில் எழுந்தருளியிருந்த சுந்தரராஜனே சிஷ்யன் வேஷத்தில் தீவட்டியைத் தூக்கிக் கொண்டு வந்து சேர்ந்தான். ஆண்டானை வீடுவரை கொண்டு விட்டுவிட்டு கோயிலை நோக்கித் திரும்பினான். தூங்கிய சுந்தரராஜன் காலையில் எழுந்தான். கோவிலில் யாரும் இல்லை. குருநாதன் எப்படி ஊருக்குப் போனாரோ என்று வருந்தினான். காலையில் ஆண்டான் கோவிலுக்கு வந்ததும் அவர் காலில் விழுந்து தன் தவறை மன்னிக்கும்படிவேண்டினான். 'நீ தான் தீவட்டியுடன் என்கூட வந்தாயே' என்றார் அவர். 'நான் வரவில்லை சுவாமி! இந்த மண்டபத்திலேயே அசந்து தூங்கிவிட்டேனே!' என்றான் சிஷ்யன். விஷயம் புரிந்தது. ஆம்! சுந்தரராஜப் பெருமாளு அவர்? 'ஏமாந்து போனேனே!' என்று ஆண்டான் கதறி அழுதார்.

ஆதாரம்: பாகவத தர்மம்,
—ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

---

தசரதனுக்குப் போரிலே உதவியவள் கைகேயி. அதனால் மனம் மகிழ்ந்து இரு வரம் தந்தான் தசரதன். அற வழியிலே ஆட்சி செலுத்திட மதிநுட்ப மந்திரியாக விளங்கினாள். ராமனை ஈன்ற பெருமை கோசலை கொண்டிருந்தாலும் வளர்த்த தாய் கைகேயிதான் என்பதும் கம்பர் கூற்றால் அரிய வாய்ப்பு உண்டு.

மதி நுட்பம், தாயன்பு, வீரம், கருணை, பாசம் அனைத்தும் கொண்ட கைகேயி (மந்தரையாம்) கூனியின் வார்த்தையால் மனம் மாறியிருப்பாளா? என்பது வினாக்குறியே! அவள் கூற்றைக் காரணமாகக் கொண்டு தன்மதி நுட்பத்தால் அன்பு மகன் ராமனைக் காக்க அவள் கொண்ட நாடகம் என்றே எண்ணத் தோன்றுகிறது.

புத்திர சோகத்தால் மாள வேண்டும் என்பது தசரதனுக்கு ஏற்பட்ட சாபம். இதை அறிந்த கைகேயி நிச்சயமாக மகனின் இழப்பும், மன்னவனின் இழப்பும் உள்ளதால் ஒன்றை யாவது தடுத்திட வழியுண்டா என ஆராய்ந்தாள். சாபம் பலிப்பது உறுதி—கணவனை இழப்பதும் உறுதி. ராமனைக் காக்க வேண்டியது தாயான தன் கடன் எனத் தீர்மானித்தாள். ஒரு பிறப்பான வாழ்க்கை முறையில், மரவுரி தரித்து முனிக்கோலம் புனைதலும், வனமேகுதலும் இரண்டாவது பிறவிக்கு ஒக்கும். நீண்ட இடைவெளிக்கு அதாவது பதினான்காண்டு வனவாசம்—சன்யாசி கோலத்தில் தவமியற்றும் பெற்ற மகன் என்ற வேதனையால் மன்னன் இறப்பு சாபப்படி நேரும் என்றாலும் காருத்தனைக் காக்க முடியுமே என்ற யுக்தியே எனக் கொள்ளலாம்.

பல்லாண்டு உடன் வாழ்ந்துவிட்ட கணவனை இழந்தாலும் பாசத்திற்கும், நேசத்திற்கும் உரிய மகனும் ராமனைக் காத்திடலாம் என்ற மதிநுட்பமிக்க நம்பிக்கை கொண்டவள் அத்தாய். அரசபீடம் ஏற்ற முடியாவிடினும், அவன் ஆயுளைக் காக்க அவள் கொண்டது அவளதுஅதிதீவிர அன்புஎனலாம்.

காட்டிலே பெற்ற சாபம் கைகேயிக்கு எப்படித் தெரியும்? என எண்ணலாம். அன்றாட அரச காரியங்களில் அன்பு மனைவியான கைகேயியைக் கலந்து செய்யும் தசரதன் அடவியில் நடந்ததை ஆசை மனைவியிடம் ஏன் தெரிவித்திருக்கக் கூடாது? என்றோ நடந்ததை மன்னன் மறந்தாலும் மனைவி மறக்கவில்லை, மாதாவின் கடமையைச் செய்தாள் என்றுதான் கொள்ள வேண்டும்.

சாதித்த வெற்றிதன்னை மேதினிக்குக் கூறாமல் அவப்பெயர் ஏற்று அற்புதத் தியாகியாக விளங்கினாள் கைகேயி என்றுதானே கொள்ளத் தோன்றும்.

துன்பத்தைத் தாங்கி, துயரினை ஏற்று, பிறர் இன்பம் ஒன்றே தன் இலக்காகக் கொண்டு வாழ்வது தாய்மைக்கே உரித்தான தனிச் சிறப்பு. இதன் காரணமாகவே தாயின் தனிக் கருணை தரணியில் சிறந்தோங்கியுள்ளது.

திருவாமூர் என்னும் திருத்தலத்தில் புகழனார் என்பாருக்கும் மாதினியார் என்ற தாய்க்கும் பிறந்தவர்கள் திலகவதியாரும் மருள்நீக்கியாரும் ஆவார்கள். திலகவதியாருக்கு கலிப்பகையாரை மணவாளனாக்க நிச்சயிக்கப்பட்ட பின்னர் மணம் முடியுமுன் போர்முனை சென்ற கலிப்பகையார் வீர சொர்க்கம் எய்தினார்.

திருமணப் பிணைப்பு ஏற்படாவிடினும், பேசி, பெற்றோர்களால் முடி

(36-ம் பக்கம் பார்க்க

'திருப்புகழைப் பாடுகின்ற வாய் மணக்கும். திருமுருகன் பேர் சொல்லும் உயிர் மணக்கும்' என்று சொல்லுவர் சான்றோர்.

காடும் காடு சார்ந்த இடத்திற்குக் கடவுள் திருமால் என்றும், மலையும் மலை சார்ந்த இடத்திற்குக் கடவுள் முருகன் என்றும், வயலும் வயல் சார்ந்த இடத்திற்குக் கடவுள் இந்திரன் என்றும், கடலும் கடல் சார்ந்த இடத்திற்குக் கடவுள் வருணன் என்றும் தொல்காப்பியம் கூறும். இதனால், தொல்காப்பியர் காலத்திற்கு முன்பிருந்த கடவுளைப் பரவும் பக்தி நெறி பண்டு தொட்டு இன்று வரை நின்று நிலவி வருகிறது என்பதை அறியலாம்.

சங்க காலத்திற்குப் பிறகு, களப்பிரர் ஆட்சிக் காலத்தில் சமணமும் பௌத்தமும் மக்கள் மீது திணிக்கப் பெற்றன. கி. மு. 3-ஆம் நூற்றாண்டில் வட நாட்டை ஆண்ட பெருவேந்தன் அசோகர் காலத்தில்தான் தமிழ் நாட்டில் பௌத்த மதம் காலூன்றியது என்பர். இதே காலத்தில் சந்திரகுப்தர் அரியணை துறந்து துறவியாக-சந்திரகுப்த முனீந்திரனாக-பத்ரபாகு என்னும் குருவுடன் மைசூருக்கு அருகில் இருக்கும் சிரவணபெலகொலா என்னும் இடத்திற்கு வந்து உயிர் துறந்த பின்னர்ச் சமண சமயம் இந்நாட்டில் தழைத்தது என்பர். இந்தக் காலத்தில் நல்ல நிலையில் இருந்த சைவமும் வைணவமும்

வது போய் இறைவனையும் இறைவன் அடியார்களையும் பாடும் இலக்கிய மரபு எழுந்தது. 'தமிழோடு இசைப்பாடல் மறந்தறியேன்' எனக் காரைக்கால் அம்மையார் திருமூலர், திருஞானசம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர், சேரமான் பெருமாள் நாயனார், ஐயடிகள் காடவர் கோன் முதலான சைவப்பெரியார்கள் உள்ளிட்ட அறுபத்து மூன்று நாயன்மார்களும், 'காப்பு மறந்தறியேன் கண்ணனே என்றிருப்பேன்' என்றபடி இறைவனைக் காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்க, பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார், திருமழிசை ஆழ்வார், பெரியாழ்வார், ஆண்டாள், குலசேகர ஆழ்வார்,

# தமிழில் பக்தி இயக்கம்

பக்தி என்பது இறைவனிடத்தில் இடையறாது அன்பு செய்வதாகும். மன்னனிடமும், மக்கள் தலைவனிடமும் முறையிட்டுத் தீர்க்கப் பெறாத குறைகளைத் தீர்த்துவைக்கும் பேராற்றல் ஒன்று உண்டு என எண்ணினர் மக்கள். அதனையே கடவுள் எனக் கொண்டார்கள்-கொண்டாடினார்கள். அவ்வாறமைந்த கடவுள்களைப் போற்றிப் புகழ்ந்து அவர்கள் பாமாலை சூட்டினார்கள். அதுவே பக்தி இலக்கியமாகத் தோற்றம் கொண்டது.

சங்க இலக்கியத்தில் அமைந்த நக்கீரர் எழுதிய திருமுருகாற்றுப்படையும், செவ்வேளுக்கு எட்டுப் பாடலும், திருமாலுக்கு ஏழு பாடலும் என அமைந்த பரிபாடலுமே முதல் முழு தமிழ்ப்பத்தி இலக்கியங்களாகத் தோற்றுகின்றன. இந்தக் காலத்தில் பத்திநெறிஇருந்தது என்பதை அறிய முடிகிறதே தவிர, பத்தி இயக்கம் இருந்ததாக அறிய முடியவில்லை.

அழிந்துபடத் தொடங்கின. இந்த நிலை கெட்ட நேரத்திலே, சமண சமயத்தின் ஊழின் வலிமை என்ற இரும்புப் பிடியிலிருந்தும், பௌத்த மதத்தின் அளவு கடந்த தியாக வாழ்வின் வற்புறுத்தலிலிருந்தும் மக்களை விடுவிக்கவும், அவர்களுக்கு மண்ணில் நல்ல வண்ணம் வாழலாம் என்ற நம்பிக்கையை ஊட்டுவதற்கும் பக்தி இயக்கங்கள் தோன்றின.

கி.பி. 6-ஆம் நூற்றாண்டின் இறுதியில் 'நின்ற சீர் நெடுமாறன்' என்ற பாண்டிய மன்னன் களப்பிரர்களை வென்று பாண்டியர் ஆட்சியை நிறுவினான். பின்னர்ப் பல்லவர் ஆட்சி அமைந்தது. இவர்கள் காலத்தில் சைவமும் வைணவமும் மீண்டும் புத்துயிர் பெற்றன; புதுப்பொலிவு உற்றன. மன்னரையும் மக்களையும் பாடு

திரு. கோவி. இராசகோபால்,

புதுதில்லி.

தொண்டரடிப்பொடி ஆழ்வார், திருமங்கை ஆழ்வார், நம்மாழ்வார், திருப்பாணாழ்வார், மதுரகவி ஆழ்வார் ஆகிய பன்னிரு ஆழ்வார்களும் தோன்றிப் பத்தி இயக்கத்தை நடாத்தினார்கள். அளவிலும் சுவையிலும் தமிழில் உள்ளன போல் வேறெந்த மொழியிலும் திருப்பாடல்கள் இல்லையாயின. தமிழ், 'பத்தி மொழி' ஆகியது.

அதனால், கி.பி. ஆறாம் நூற்றாண்டிலிருந்து கி.பி. ஒன்பதாம் நூற்றாண்டு வரை சமய இலக்கியம் ஓங்கி வளர்ந்த இக்காலத்தைப்பற்றி இலக்கிய காலம் எனத் தமிழிலக்கிய காலம் சிறப்புச் செய்யப்பெற்றது.

'பத்தி என்னும் நங்கை தமிழ் நாட்டில் பிறந்து கருநாடகம், மகாராட்டிர மாநிலங்களில் பருவமடைந்து, குசராத் முதலிய வட இந்தியா எங்கும் வருந்திச் சென்று, பிருந்தாவனத்தில் ஞானம், வைராக்கியம் என்னும் இரு குழவிகளை ஈன்

## ஸ்ரீ கல்யாண வேங்கடேஸ்வர சுவாமி கோயில்

### ஸ்ரீ நிவாசா மங்காபுரம்

**ஆர்ஜித ஸேவைகள் :**

| | | |
|---|---|---|
| 1. | நித்ய அர்ச்சனை, ஒரு வருடத்திற்கு | ரூ. 42/- |
| 2. | நிரந்தர நித்ய அர்ச்சனை, (ஆயுள் முழுவதும்) | ரூ. 542/- |
| 3. | கல்யாணோத்சவம், (நாள் தோறும்) | ரூ. 200/- |
| 4. | அபிஷேகம்-(வெள்ளிக்கிழமைகளில் மட்டுமே) | ரூ. 100/- |

**தளிகைகள் (நைவேத்தியங்கள்) :**

| | | | |
|---|---|---|---|
| 1. தத்யோதனம் | ரூ. 75/- | 5. ஸீரா | ரூ. 300/- |
| 2. புளியோதரை | ரூ. 100/- | 6. தோசை(படி) | ரூ. 300/- |
| 3. பொங்கல் | ரூ. 110/- | 7. கேஸரி பாத் | ரூ. 180/- |
| 4. சர்க்கரைப் பொங்கல் | ரூ. 135/- | 8. ஸாகர பாத் | ரூ. 150/- |

மூன்று நாட்களுக்கு முன்பேயே மேற்படி ஸேவைகள் மற்றும் தளிகைகளுக்கான தொகையினைச் செலுத்துதல் வேண்டும்.

(திருப்பதி-சித்தூர் நெடுஞ்சாலையில் திருப்பதியிலிருந்து சுமார் 10 கி.மீ. தொலைவில் இத்திருத்தலம் உள்ளது).

ருள்' எனப் பாகவத புராணத்தில் சொல்லப்பெற்றுள்ளது. இதனால் பத்தி இயக்கம் என்பது முதன் முதல் தமிழகத்தில்தான் தோன்றியுள்ளது என்பது புலப்படுகிறது.

கி. பி. ஐந்தாம் நூற்றாண்டளவில் தோன்றிய காரைக்காலம்மையாரும், திருமூலருமே சைவ பத்தி இயக்கத்தின்—இலக்கியத்தின் முதல் எழுச்சிப் புலவர்களாகத் தோன்றுகின்றனர். இவர்களுக்குப் பின்னர், ஏறத்தாழ ஒரு நூற்றாண்டுக்குப்பின் பொய்கை ஆழ்வார், பூதத்தாழ்வார், பேயாழ்வார் என்ற மூவரும் தோன்றி, வைணவ பத்தி இயக்கத்தின்—இலக்கியத்தின் முதல் மூவராகத் தோன்றுகின்றனர்.

காரைக்கால் அம்மையார், இறைவனால், 'அம்மை' எனச் சிறப்பிக்கப் பெற்றவர். கணவனால் கைவிடப் பெற்ற நிலையில் இம்மை வாழ்வு நீங்கி ஈடிலா இன்ப வாழ்வை வேண்டி, பேய்க் கணங்களுள் ஒன்றாக இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர் இவர். இவர் திருப்பாடல்கள் 11-ஆம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளன.

"அறிவானுந் தானே அறிவிப்பான் தானே
அறிவாய் அறிகின்றான் தானே—அறிகின்ற
மெய்ப்பொருளுந் தானே விரிசுடர் பார் ஆகாயம்
அப்பொருளுந் தானே அவன்"

என இறைவனை எல்லாமுமாகக் கொண்டு இறவாத இன்ப அன்பு செய்தவர் இவர்.

"நான் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்", "உள்ளம் பெருங் கோயில்; ஊனுடம் பாலயம்" "ஒன்றே குலமும் ஒருவனே தேவனும், நன்றே நினைமின்", "அகத்திற் கண் கொண்டு பார்ப்பதே ஆனந்தம்" என்ற புதிய சமயச் சிந்தனைகளைத் தோற்றுவித்தவர் திருமூலர் ஆவர். இவர் இயற்றிய திருமந்திரம் பத்தாம் திருமுறையில் சேர்க்கப்பட்டுள்ளது. இவரைச் சிவயோகத்தில் அமர்ந்த யோகி என்பர். சித்தர் மரபு இவருடன் தொடங்குகிறது. இவரைத் தொடர்ந்து திருமாளிகைத் தேவர், கருவூரார், பட்டினத்தார் முதலானவர் பாடல்கள் பத்தி இலக்கியத்தில் அமைந்திருக்கின்றன. இறைவனை மையமாகவும் அடிப்படையாகவும் கொண்டெழுந்த சமயம், பத்தி என்னும் அதன் அருவ அடிப்படையை விட்டு நீங்கிச் சடங்காசாரங்களை சமயம் எனப் புறவுருவு கொண்டு வளர்ந்தபோது, அதனைக் கண்டித்துத் தூய்மைப்படுத்தும் பெருநோக்குடன் தோற்றம் கொள்ளுகிறது சித்தர் பாடிய பத்தி இலக்கியம். சித்தருக்கும் சமயாச்சாரியருக்கும் வேறுபாடு சமயத் தத்துவத்திலோ, பத்தியிலோ இல்லை. இறைவனை அணுகும் முறையிலும் பத்தியை வெளிப்படுத்தும் விதத்திலும்தான் வேறுபாடு எனக் கூறுவர். சமயக் குரவர்கள் நட்டு வளர்த்த 'பத்தி' எனும் நந்தவனம், களைகள் பொருந்திய காடாக மண்டியபோது அதனைக் களைகட்டுத் தூய்மைப்படுத்தியவர்கள் சித்தர்களே ஆவர்.

பத்தி இயக்கத்தை முறையாக நடாத்தி, வேரூன்றச் செய்தவர், இளமையிலேயே இறைவன் அருள் பெற்று, நாளும் இன்னிசையால் தமிழ் பரப்பும் திருஞானசம்பந்தர் ஆவர். தமிழ் நாட்டின் பல தலங்களுக்கும் சென்று, பலரை வாதத்தில் வென்று சைவர்களாக மாற்றியவர் இவர். 'வேத நெறி தழைத்தோங்க மிகு சைவத்துறை விளங்க' வந்த இவர் 'நின்ற சீர் நெடுமாறன்' என்னும் பாண்டிய மன்னனைச் சமண சமயத்தினின்று சைவ சமயத்திற்குக் கொணர்ந்தார். சைவ சமயத்தை இம்மண்ணில் நிலைநாட்டியதால் இவரைத் 'திராவிட சிசு' என ஆதி சங்கரர் அழைப்பர். இறைவனைக் காதலனாக எண்ணி, காதலி நிலையில் இருந்து, மடக்கிளியை இறைவன்பால் தூதனுப்பிய முதற்பத்தி இலக்கிய கவிஞரும் இவரே ஆவர். இதே காதலி நிலையில் இருந்து,

"முன்னம் அவனுடைய நாமங் கேட்டாள்
மூர்த்தி அவனிருக்கும் வண்ணம் கேட்டாள்

பின்னே அவனுடைய ஆரூர்
கேட்டாள்
பெயர்த்தும் அவனுக்கே பிச்சி
யானாள்
அன்னையையும் அத்தனையும்
அன்றே நீத்தாள்
அகன்றாள் அகலிடத்தார் ஆசா
ரத்தைத்
தன்னை மறந்தாள்தன் நாமங்
கெட்டாள்
தலைப்பட்டாள் நங்கை தலைவன்
தாளே'

எனப் பாடல் பாடி, இறைவன் இன்னடியை அடையத் துடித்தவர் திருநாவுக்கரசர் ஆவர். இளமையில் பெற்றோரை இழந்து, தமக்கையார் திலகவதியாரை மறந்து, சமண சமயம் புகுந்து, 'தருமசேனர்' என்ற பட்டம் பெற்றுச் சூலை நோயால் வருந்தி, மீண்டும் சைவ சமயத்திற்கு வந்தவர் ஆவர் திருநாவுக்கரசர். இவருக்குச் சம்பந்தர் இட்ட பெயர் அப்பர் என்பதாகும் 'பாவுற்றலர் செந்தமிழ்ப் பதிகத்தொடை பாடிய பான்மையினால் நாவுக்கரசர்' என்ற பெயரை இறைவர் வழங்கினர். எண்பத்தோர் ஆண்டுகள் வாழ்ந்து, வாழ்க்கையில் பல துன்பங்கள் பட்டு, அனுபவ முதிர்ச்சி பெற்ற அடியார் இவரே. 'என் கடன் பணி செய்து கிடப்பதே' என்ற பரந்துபட்ட கொள்கையில், 'நாமார்க்கும் குடியல்லோம் நமனை அஞ்சோம், நரகத்தில் இடர்ப்படோம் நடலை யில்லோம், ஏமாப்போம் பிணியறியோம் பணிவோமல்லாம்' என்ற வீரப் பெரு வாழ்வு—சீலத் தவ வாழ்வு வாழ்ந்தவர் இவர். முதலாம் மகேந்திரவர்ம பல்லவனைச் சமண சமயத்திலிருந்து சைவ சமயத்திற்குக் கொணர்ந்தவரும் இவரே.

இவரைத் தொடர்ந்து, கி. பி. 7-ஆம் நூற்றாண்டின் இறுதியில் தோன்றியவர் சுந்தரர் ஆவர். திருவாரூரில் பரவை நாச்சியாரைக் காதலித்து மணந்து, பின்னர் வேளாளர் குலத்துதித்த சங்கிலி நாச்சியாரையும் கடிமணம் புரிந்து கொள்ளும் தறுவாயில் இறைவனால் ஆட்கொள்ளப்பட்டவர் இவர். 'ஏழிசையாய் இசைப்பயனாய் இன்னமுதாய் என்னுடைய தோழனுமாய் யான் செய்யும் துரிசுகளுக்குக் கிடனாகி' என்று இறைவனைப் பாடிப் பரவியவர். அதனால் இவரைத் 'தம்பிரான் தோழர்' என்று குறிப்பிடுவர். இவர் பாடல்களில் துன்பச் சூழலும், வெறுப்பும், துறவும் காணப்படவில்லை. ஆயின், இவருக்குப் பின்னால் தோன்றிய மாணிக்கவாசகர் பாடல்களிலோ ஏக்கம் மிகுதியாகக் காணப்படுகிறது.

"அம்மையே அப்பா ஒப்பிலா மணியே
அன்பினில் விளைந்த ஆரமுதே
பொய்ம்மையே பெருக்கிப் பொழு
தினைச் சுருக்கும்
புழுத்தலை புலையனேன் தனக்குச்
செம்மையே யாயச் சிவபதம் அளித்த
செல்வமே சிவபெரு மானே
இம்மையே தொடர்ந்துனைச் சிக்
கெனப் பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே"

"பால் நினைந் தூட்டும் தாயினும்
சாலப்
பரிந்து நீ பாவி யேனுடைய
ஊனினை உருக்கி உள்ளொளி
பெருக்கி
உலப்பிலா ஆனந்த மாயத்
தேனினைச் சொரிந்து புறம் புறம்
திரிந்த
செல்வமே சிவபெரு மானே
யானுனைத் தொடாந்து சிக்கெனப்
பிடித்தேன்
எங்கெழுந் தருளுவது இனியே"

"வேண்டத் தக்கது அறிவோய் நீ
வேண்ட முழுதும் தருவோய் நீ
வேண்டும் அயன்மாற்கு அரியோய் நீ
வேண்டி என்னைப் பணி
கொண்டாய்
வேண்டி நீ யாது அருள் செய்தாய்
யானும் அதுவே வேண்டின்
அல்லால்
வேண்டும் பரிசு ஒன்று உண்டு
என்னில்
அதுவும் உந்தன் விருப்பு
அன்றே"

"அன்றே எந்தன் ஆவியும்
உடலும் உடமை எல்லாம்
குன்றே அனையாய் என்னை ஆட்
கொண்டபோதே கொண்
டிலையோ?
இன்று ஓர் இடையூ றெனக்கு
உண்டோ?
எண்தோள் முக்கண் எம்மானே!
நன்றே செய்வாய் பிழை செய்வாய்
நானோ இதற்கு நாயகமே"

எனப் பாடிப்பாடி, 'திருவாசகத்திற்கு உருகார் ஒரு வாசகத்திற்கும் உருகார்' எனும்படி ஓர் திருவாசகம் படைத்தவர் மாணிக்கவாசகர். அரிமர்த்தன பாண்டியனிடம் அமைச்சராய் இருந்த இவர், இறுதியில் இணையடி நீழலை அடைந்தவர்.

கி. பி. ஆறும் நூற்றாண்டாகிய இருண்ட காலக் கட்டத்திலே, காஞ்சிபுரத்தில் பொய்கையாழ்வாரும், மாமல்லபுரத்திலே பூதத்தாழ்வாரும், மயிலாப்பூரிலே பேயாழ்வாரும் தோன்றினர். "வையந் தகளியா வார் கடலே நெய்யாக, வெய்ய கதிரோன் விளக்காகச் செய்ய சுடராழியான் அடிக்கே சொன்மாலை" "சூட்டியவர் பொய்கையாழ்வார்" ஆவர். "அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக, இன்புருகு சிந்தை இடுதிரியா, நன்புருகி நாரணற்கு ஞானச் சுடர் விளக்கேற்றியவர்" பூதத்தாழ்வார் ஆவர்.

"திருக்கண்டேன் பொன் மேனி
கண்டேன் திகழும்
அருக்க னணிநிறமுங் கண்டேன் —
செருக்கிளரும்
பொன்னாழி கண்டேன் புரிசங்கங்
கைக்கண்டேன்
என்னாழி வண்ணன்பா லின்று"

என்று திருமாலின் திருவழகிலே திளைத்துக் களித்தவர் பேயாழ்வார் ஆவர். 'காப்பு மறந்தறியேன் கண்ணனே என்றிருப்பேன்' எனப் பாடிக் கண்ணனின் தொண்டிலே காலங்கழித்தவர் திருமழிசை ஆழ்வார் ஆவர்.

"மாணிக்கங் கட்டி வயிரம் இடைக்கட்டி
ஆணிப் பொன்னாற் செய்த வண்ணச் சிறு தொட்டில்
பேணி யுனக்குப் பிரமன் விடுதந் தான்
மாணிக் குறளனேதாலேலோ
வையமளந்தானே தாலேலோ"

எனத் தாலாட்டுப் பாடி, 'பிள்ளைத் தமிழ்' எனும் புதிய இலக்கிய வகையைத் தோற்றுவித்தவர் பெரியாழ்வார் ஆவர். நந்தவனம் அமைத்து, பூக்கொண்டு, மாலை தொடுத்து, இறைவனுக்கு அதை சாற்றி மகிழ்ந்த தொண்டர் இவர்.

"கருப்பூரம் நாறுமோ கமலப்பூ நாறுமோ
திருப்பவளச் செவ்வாய்தான் தித்தித் திருக்குமோ
மருப்பொசித்த மாதவன்தன் வாய்ச் சுவையும் நாற்றமும்
விருப்புற்றுக் கேட்கின்றேன் சொல் லாழி வெண்சங்கே"

என இறைவன் மேல் காதல் கொண்டு, "மானிடவர்க் கென்று பேச்சுப் படில் வாழ்கில்லேன்" என உரைசாற்றி, சூடிக்கொடுத்த சுடர்க் கொடி எனப் பெயர் பெற்றவர் பெரியாழ்வார் புதல்வி ஆண்டாள் ஆவள்.

"வாடினேன் வாடி வருந்தினேன் மனத்தால்
பெருந்துயர் இடும்பையில் பிறந்து
கூடினேன் கூடி இளையவர் தம்மொடு
அவர் தரும் கலவியே கருதி
ஓடினேன் ஓடிஉய்வதோர் பொருளால்
உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து
நாடினேன் நாடி நான் கண்டு கொண்டேன்
நாராயணா என்னும் நாம"

என்று இறைவன் நாமப் பெருமையை நன்கறிந்து உய்ந்தவர் கள்ளர் குடியிலே தோன்றிய திருமங்கையாழ்வார் ஆவர்.

"ஊரிலேன் காணி இல்லை உறவுமற் றொருவர் இல்லை
பாரில்நின் பாதமூலம் பற்றிலேன் பரமமூர்த்தி
காரொளி வண்ண னேயென் கண்ணனே கதறுகின்றேன்
ஆருளர் களைகண் அம்மா அரங்கமா நகருளானே

எனக் கதறி, கண்ணனின் அருள் பெற்றுய்ந்தவர் தொண்டரடிப் பொடி ஆழ்வார் ஆவர்.

"கொண்டல் வண்ணனைக் கோவல னாய் வெண்ணெய்
உண்ட வாயன் என்னுள்ளம் கவர்ந் தானை
அண்டர் கோன் அணி அரங்கன் என் அமுதினைக்
கண்ட கண்கள் மற் றொன்றினைக் காணாவே"

எனக் கடுவிரதம் இருந்து, கண்ணன் அருள் பெற்றவர் திருப்பாணாழ்வாராவர்.

"செடியாய வல்வினைகள் தீர்க்கும் திருமாலே
நெடியானே வேங்கடவா நின் கோயிலின் வாசல்
அடியாரும் வானவரும் அரம் பையரும் கிடந்தியங்கும்
படியாய்க் கிடந்துன் பவளவாய் காண்பேனே"

எனப் படியாய்க் கிடந்து பான்மை பெற்றவர் குலசேகர ஆழ்வார் ஆவர்.

ஆழ்வார்களிலே தலைச் சிறந்தவராகக் கருதப் பெறுபவர் நம்மாழ்வார் ஆவர்.

"நீ அலையே சிறு பூவாய் நெடு மாலார்க்கு என் தூதாய்
நோய் என்து நுவலென்ன நுவ லாதே இருந்தொழிந்தாய்
சாயலொடு மணிமாமை தளர்ந்தேன் நான் இனியுனது
வாயலகில் இன்னடிசில் வைப்பாரை நாடாயே"

எனப் பாடியவர் இவரே. நம்மாழ்வாரின் அடியாராய் இருந்த மதுரகவியாழ்வாரே இறுதி, பன்னிரண்டாவது ஆழ்வார் ஆவர்.

'ஆவுரித்துத் தின்றுழலும் புலையரேனும் அரனார்க்கு அடியாராயின் நாமவர்க்கு அடியார்' என்ற சைவ அடியார் வழிபாட்டு நெறி போன்றே, ஆழ்வாரிடமும் 'இழிகுலத்தவர்களேனும் எம்மடியார்களாகில் நின்னோடு மொக்க வழிபட அருளினாய்' எனக் கொண்டாடுகின்றனர். சைவர்கள் சிவனை முழுமுதற் கடவுள் என்றனர். வைணவர் திருமாலை முழுமுதற் கடவுள் என்றனர். ஆயின் தத்துவ அடிப்படையில் பதி, பசு, பாசம் என்ற சைவ முப்பொருளும், ஈசுவரன், சித்து, அசித்து என்ற வைணவ முப்பொருளும் ஒரு பொருள் பயந்தே நிற்கின்றன.

*

சென்ற இதழில் 17-ஆம் பக்கத்தில் வெளியிடப்பட்டுள்ள ஸர்ப விநாயகர் எனும் கட்டுரையின் ஆசிரியரான திரு. டி. என். ராமசுவாமி பிள்ளை (பாபநாசம்) அவர்களின் பெயர் தவறுதலாக விடப்பட்டுள்ளமைக்கு வருந்துகிறோம். ஆர்.

# எம்பெருமானைப் பாடிப் பரவிய பாண் பெருமாள்

"சாதிகள் இல்லையடி பாப்பா—குலத்
தாழ்ச்சி உயர்ச்சி சொல்லல் பாவம்"

என்ற மகாகவி பாரதியாரின் அறிவுரை முக்காலத்திற்கும் உரியதாக உள்ளது. ஏனென்றால் அவருடைய காலத்திற்குப் பன்னூற்றாண்டுகளுக்கும் முன்பிருந்தே சாதிகள் நம் நாட்டில் வேரூன்றி மக்களை ஆட்டிப் படைக்க ஆரம்பித்துவிட்டன. அவருக்குப் பின்னரும்கூட, நாடு விடுதலை பெற்று, 'எல்லோரும் இந்நாட்டு மன்னராகி' உள்ள இந்நாளிலும் சாதிப் பிரிவினைகளும், ஏற்றத்தாழ்வுகளும் ஒழிந்தபாடாய்க் காணோம். வருங்கால பாரத சமுதாயத்திலாவது சாதிப்பேய் ஒழிய வேண்டுமானால் பாரதியின் பாட்டடிகள் வெறும் "பாப்பாப்பாட்டாக" இல்லாமல் ஒன்றுபட்ட மக்களின் "நாட்டுப் பாடலாக" (தேசிய கீதமாக) மிளிர வேண்டும். என்றைக்குச் சில சமுதாய நலன்களைக் கருதி சாதியமைப்பானது நம் நாட்டில் இடம் பெறத் தொடங்கியதோ அன்றைக்கிருந்தே அவ்வமைப்பிலுள்ள பல கொடுமைகளைப் பெரியோர் பலரும் எடுத்தியம்பி வந்துள்ளனர். காலப்போக்கில் சாதிப் பிரிவினைகளால் நாட்டிற்குண்டான ஒரு சில நன்மைகளும் அற்றுப்போக பற்பல பெருந்தீமைகளே அவற்றால் ஏற்படலாயின. இறையடியார்களுக்குள்ளேயே பிறப்பால் உயர்வு தாழ்வு பாராட்டும் பெரும் இழிவு நேர்ந்தது. அந்தஇழிவைஇறைவனே தலையிட்டுப் போக்க வேண்டிய நிலையும் வந்துற்றது. திருப்பாணாழ்வாரின் வாழ்வு இதற்குத் தக்கச் சான்றாகத் திகழ்கின்றது.

திருப்பாணாழ்வார் கலியுகத்தில் 343-வது வருடமான துர்மதியில் கார்த்திகை மாதம், உரோகிணி நட்சத்திரத்தில் அவதரித்தாரெனக் கூறப்படுகிறது. அவர் தோன்றிய இடம் காவிரியின் தென்கரையில் திருச்சி கோட்டை ரயில் நிலையத்திலிருந்து ஒரு கல் தொலைவிலுள்ள உறையூராகும். அவர் பாணர் குலத்தில் தோன்றியதால் திருப்பாணர் என்று அழைக்கப்படலானார். கருவிலேயே திருவுடையராய்த் திகழ்ந்தவர். நாளும் திருவரங்கத்துப் பெரிய பெருமாளிடம் பக்தி மிக வளரும் பெற்றியோடு பெரியவரானதில் வியப்பில்லைதான். ஆனால் திருவரங்கம் சென்று பெரிய பெருமாளை நேரில் வழிபட மட்டும் அவர் மனம் இடம் தரவில்லை. அதற்குக் காரணம், பெரிய பெருமாளின் திருத்தலத்தைத் தம் கால்களால் மிதிப்பதும் தகாதென அஞ்சினார் அவ்வுத்தமர். அக்காலத்தில் கீழ்ச்சாதிகளில் ஒன்றெனக் கருதப்பட்ட பாணர் குலத்தில் தோன்றிவிட்டாரே, என் செய்வார்! திருவரங்கத்தைத் தம் கால்களால் மிதிப்பதில்லையென்ற அவர்தம் நோன்பு பக்தியின் மேலிட்டால் அவர் தாமாக மேற்கொண்டதாகவே இருக்கலாம். ஆனால், இறைவனால் ஆட்கொள்ளப்பட்ட நாள் வரையிலும், ஒரு கீழ்ச்சாதி மகன் எனப்பட்டார். உயர் சாதியினர் எனத் தம்மைக் கருதிக் கொண்டோரால் அடைந்து வந்த சொல்லரும் இன்னல்களையும், இழிவுகளையும் அவரும் அடைந்து வந்தாரென்பது யாராலும் மறுக்க முடியாத உண்மையாகும்.

சேற்றிலே தோன்றியதென்ற பழியைக் கூறிச் செந்தாமரையின் சிறப்பைக் குறைத்துவிட முடியுமா? காட்டிலே தோன்றியதென்ற காரணம் காட்டி மணக்கின்ற சந்தனத்தின் மேன்மையை அழித்துவிட முடியுமா? அவ்வாறேதான், நம்முடைய திருப்பாணனும் திருவரங்கனின் திருவடிகளில் ஒன்றிய சிந்தையராய் கையில் கொண்ட வீணையை மீட்டி திருவரங்கனின் திருப்புகழையே பாடித் திரிபவராய் காவிரியாற்றின் தென்கரையில் நின்று கொண்டு ஸ்ரீரங்க விமானத்தைக் கண்டு களிப்பெய்தி பக்திப் பரவசத்தில் நாளும் மிதப்பவராய் விளங்கலானார்.

அவருடைய பக்தி வலையில் பெரிய பெருமாளும் அகப்பட்டுப் போனார். அதனால்தான், அந்த அடியார்த் திலகத்தைத் தம்முடன் ஐக்கியப்படுத்திக் கொள்ள ஒரு நாள் திருவுளம் கொண்டருளினார். தக்கவர் மூலம், தக்க விதத்தில், தம்மிடத்தில் திருப்பாணனரைக் கொண்டுவர இச்சை கொண்டார். அவ்வாறு செய்தாலே, திருப்பாணனின் உயர்வும், 'சாதியால் எவருக்கும் உயர்வு வருவதில்லை' என்ற உண்மையும் இவ்வுலகிற்கு நன்கு தெரியவரும் என்பதாக இறைவனின் திருவுளக் கருத்து இருந்திருக்கும் போலும்.

வழக்கம்போல் ஒரு நாள் காவிரியின் தென் கரையில் நின்றவண்ணம் திருவரங்கனின் பெருமைகளை வீணை இசையோடு பாடியவராய் மெய்ம் மறந்திருந்தார் திருப்பாணனர். அப்போது திருவரங்கனுக்குத் திருமஞ்சனம் முதலான திருப்பணிகள் செய்து வந்த உலோகசாரங்க மாமுனி என்ற அந்தணர் அங்கே வந்தார். அவர் காவிரியினின்றும் பெரியபெருமாளுக்குத் திருமஞ்சனத் தீர்த்தம் கொண்டு போவதற்காக திருமஞ்சனக் குடத்தோடு வந்திருந்தார். கீழ்ச்சாதியினரான திருப்பாணனரைத் தம்

வி. சோமசுந்தரம்
சென்னை — 600051.

வழியில நிறகக் கண்டு, தமக்கு வழி விட்டுத் தூரமாகப்போகுமாறுஆணை யிட்டார். அணியரங்கனிடம் ஆட் பட்ட நெஞ்சினரான திருப்பாண ரின் திருச்செவிகளில் அவர் சொல் லியது எதுவும் விழவில்லை. உடனே அந்தணருக்கு அடங்காத கோபம் வந்துவிட்டது. அருகிலிருந்த ஒரு கல்லை எடுத்து திருப்பாணரின் முகத்தில் அடித்துவிட்டார். திருப் பாணர், நடந்ததை யுணர்ந்து, 'அந்தணரிடம் அபசாரப்பட்டோமே' என்று வருந்தும் உள்ளத்தினராய் தூரப்போய் நின்றார். அந்தணர் அதன் பிறகு காவிரியில் இறங்கி நீராடி, திருமஞ்சன நீர் எடுத்துக் கொண்டு ஸ்ரீரங்கத்திற்குத் திரும் பினர். அங்கே இறைவனே திருக் காப்பிட்டுக்கொண்டு திருப்பாணரு ருக்குத் தீங்கிழைத்த அந்தணருக்குத் தம்முடைய திருக்காட்சி நல்காமல் இருந்துவிட்டான். குற்ற உணர் வுடன் அன்றிரவு தூங்கச் சென்ற அந்தணரின் கனவில் அரங்கநாதன் காட்சி தந்தான். "நாளும் எம்மை நல்லிசையால் பாடிப்பரவும் பாண் பெருமாளை இழிகுலத்தவனென நீர் நினைக்கலாமோ? உடனே சென்று அவரை உம்முடைய தோளிலே ஏற்றிக் கொண்டு எம்மிடம் அழைத்து வாரும்" என்று ஆணையிட்டான்.

துயில் நீங்கி எழுந்த அந்தணர் நேராக திருப்பாணர் பாடித் திரி யும் காவிரியாற்றங்கரைக்கு ஓடினர். திருப்பாணரின் திருவடிகளில் வீழ்ந்து தொழுதார். "பெரியீர்! என் பிழையைப் பொறுத்தருளி என் தோளின் மீது தாங்கள் எழுந்தருளல் வேண்டும், பெரிய பெருமாளின் திருச்சன்னதியில் தங்களைக் கொண்டு சேர்ப்பது என் கடன். இது நம்பெரு மாளின் ஆணை" என்று கண்ணீர் மல்க வேண்டிக் கொண்டார். திருப் பாணரோ அஞ்சி நடுங்கினர். 'அந்தணர் முன் நிற்பதே பாவம்' என்றிருக்க அவர் மீதேறி பவனி செல்வதா?' என்று திகைப்படைந் தார். பின்னர், இறையாணையை ஈடேற்றலே தம்தலையாயபணியெனத் தேறி உடன்பட்டார். உலோக சாரங்க மாமுனி அவரைத் தம் தோளில் ஏற்றிக்கொண்டு திருவரங்க நகர் போய்ச் சேர்ந்தார். பெரிய கோயிலினுட் சென்று இறைவனின் திருமுன் நின்றார்.

முதன்முதலாக திருவரங்கனைக் கண்ட திருப்பாணர் அடைந்த களிப்பிற்கோர் அளவில்லை. அவனது திருவடி தொடங்கி திருமேனி ஈறாக தம்மை ஈர்த்தவிதத்தைப் பத்து பாடல்களில் பாடி மகிழ்ந்தார். 'அமலனாதிபிரான்' என்ற அவரு டைய அந்த திவ்யபிரபந்தம், நாலா யிரத்திவ்யபிரபந்தத்தில் ஒரு சிறு பகுதிதான். ஆனால், அரங்கனின் அழகை ஆராதிப்பதில் அதற்கீடு சொல்வது அரிது. உலோகசாரங்க மாமுனியும், ஏனைய திருக்கோயில் பணியாளரும் காணும் அளவிலேயே பெரிய பெருமாள், திருப்பாணரை சோதியாய்த் தோன்றச் செய்து தம் திருமேனியில் சேர்த்துக் கொண்டரு ளினர். அது முதல் அவர் திருப்பா ணாழ்வார் என்று பன்னிரு ஆழ்வார் களில் ஒருவராக சிறப்புடன் அழைக் கப்படுவராயினர். அவருடைய வாகனமென்றே உலோகசாரங்க மாமுனி பேசப்படலானர்.

இனி, திருப்பாணாழ்வார் அருளிச் செய்துள்ள அமலனாதிபிரான் திவ்ய பிரபந்தத்தில் நம் கருத்தைச் சிறிது செலுத்துவோம்.

"அமல னாதிபி ரான்அடி யார்க்கு
என்னை யாட்படுத்த
விமலன் விண்ணவர் கோன்விரை
யார் பொழில் வேங்கடவன்
நிமலன் நின்மலன் நீதிவானவன்
நீள்மதி ளரங்கத் தம்மான்திருக்
கமல பாதம் வந்து என் கண்ணி
னுள்ளன வொக்கின்றதே"

என்ற முதல் பாடலில் இறைவன் தானாக வந்து தம்மை ஆட்கொண்ட தாகக் கூறுகிறார் ஆழ்வார். இறை யுணர்வு எழலும், அவ்வுணர்வு உறுதிப் படலும், ஆதலால் உய்வடையலும் அவனருளால்தானே கைகூடலாகும். பின்னரும் ஐந்தாம் பாடலில்,

"பார மாயபழவினை பற்றறுத்து
என்னைத்தன்
வார மாக்கினை வைத்தான் வைத்த
தன்றிஎன் னுள்புகுந்தான்"

என்று பாடியிருத்தல் காணலாம்.

முதலாம் பாடலில் குற்றமற்றவன் என்ற ஒரே பொருளுடைய அமலன், விமலன், நிமலன், நின்மலன் என்ற நான்கு சொற்கள் இறைவனைக் குறித்து வந்துள்ளன. ஆனால், அச் சொற்களுக்கு இறைவனின் வெவ் வேறான தன்மைகளைக் கருதி வெவ் வேறு பொருள் கண்டுரைத்துள்ளனர் நம் பெரியோர்.

இறைவன் குற்றங்குறை ஏதும் அற்றவன் என்பது மட்டுமல்ல. அடி யாரிடத்தும் குறை ஏதும் காணா தவன். அவனா சாதிப்பிரிவு கருதி ஆழ்வாரிடத்துக் குறை காண்பான்? அத்தகையவன் விமலன் (தன்னிடத் தும் குற்றம் இல்லாதவன். தன்னடி யாரிடத்தும் குற்றம் பாராதவன்) தானே!

அவன் தேவர்க்கு வேண்டுமானல் அரியவனாக இருக்கலாம். அடி யார்க்கு எளியவனல்லவா! அவனே ஒப்பற்ற நிமலன்! அவனுக்குப் பிறப் பால் அந்தணன் எனப்படுவோனும், கீழ்ச்சாதி மகன் எனப்படுவோனும் ஒன்றேயல்லவா!

அவனது எளிவந்த தன்மையானது அடியார்தம் குற்றங்குறைகளையே பெரிய போக்கியமாகக் கொண் டருளச் செய்கிறது. "என்னடியா ரிடத்து யானேதும் பிழை நோக் கேன்". என்னைச்சேர வரும் அடி யான் எப்படியன் ஆயினும் விரைந்து என்னைச் சேர வருக" என்று தம் திருக்கரங்களால் அழைத்தரவணைத் துக் கொள்ளும் அவனே பெரிய நின் மலன்.

திருப்பாணாழ்வாருக்குத்திருவரங்க னின் சந்நிதிக்குள் போவதற்கே முத

வில் பயமாயிருந்தது. 'தாழ்ந்த குலத்தில் தோன்றிய தாம் போவ தால் பெரிய பெருமாளுக்கு ஏதும் பெரிய குற்றம் நேருமோ' என்று ஐயப்பட்டார். அவருடைய ஐயம் எம்பெருமானுடைய திருமுன்னர் பொய்யாகிப் போய்விட்டது. திருவரங்கன் அழகுத் திருமேனியனுய் பன்மடங்குப் பொலியக் கண்டவளவிலே எம்பெருமானிடம் எந்த குற்றமும் சென்று சேர முடியாது என்று தெளிவு கொண்டார். அவன்தான் அமலனுயிற்றே !

முதல் பாடலில் நீள்மதிளரங்கத் தம்மான் திருக்கமலபாதம் வந்து தம்மை ஆட்கொண்டதைக் கூறியவர், இரண்டாம் பாடலில் தம் சிந்தை அது முதற்கொண்டு பெரிய பெருமாளின் திருவடிவழகில் தாமாக ஈடுபட்டதைக் கூற ஆரம்பிக்கிருர். அரங்கத்தம்மான் அரைச்சிவந்த ஆடையின் மேல் சென்றதாம் ஆழ்வாரின் சிந்தனே. அவனே, 'உவந்த வுள்ளத்தனுய் உலகமளந்து அண்டமுற நிவந்த நீள் முடியன்'. இங்கே மாவலியின் செருக்கை அடக்குவதற்காக வாமனனுக வந்து, மூன்றடி மண் இரந்துக் கொண்டு, திரிவிக்கிரமனுகி மண்ணும், விண்ணும் ஈரடியால் அளந்து, மூன்ரும் அடிக்கு இடமின்றிப் போக சிரம் தாழ்த்தி நின்ற மாவலியை தம்முடைய திருப்பாதத்தால் பாதாளத்தில் அழுத்தி தேவர்களேயும், பிறரையும் வாழ வைத்த எம்பெருமாளின் வைபவம் பேசப்படுகிறது. உலகமளந்தவனின் உவகைக்குக் காரணமென்ன? எம்பெருமாள் மாவலியின் செருக்கை அடக்குவதன் மூலம் அவனேத் தம் அடியானுக ஆட்கொள்ள முடிந்தது. அது மட்டுமின்றி, அவன் விண்ணேயும், மண்ணேயும் அளந்தபோது அனேத்துலக உயிர்களின்மீதும் தம்முடைய திருவடிகளே வைத்து அருள்பாலிக்க வாய்ப்பு ஏற்பட்டது. இதனுலே அவன் உவந்தஉள்ளத்தனுய் உலகளந்தான் ஆயினுன். அவன்தேவரையும், மூவரையும், அண்டசராசரங்களேயும் ஆதரிக்கும் அருளாளன் என்பது இதனுல் விளங்குகிறது.

திருப்பாணுழ்வாரின் மனம் இராமாவதாரத்திலும் தோய்ந்திருந்தது. இராமன் இலங்கைப் போரில் அரக்கரைக் கொன்று குவித்ததைக் கூறத்தலேப்பட்டவர் உடனே திருவரங்கனே நினேவு கூறுகிருர்:

"நிவந்த நீள்முடி யன்அன்று
நேர்ந்த நிசாசரரை
கவர்ந்த வெங்கணேக் காகுத்தன்
கடி யார்பொழி லரங்கத் தம்மான்"

என்ற அடிகளுக்கு பராசர பட்டர் அருளியுள்ள உரை சுவையானது. திருப்பாணுழ்வார் கோதண்டராமனேப் பாடத் தொடங்கியதும், இராமனுக்கு அவர்தம் பாடல்களேப் போர்க்களத்திலிருந்து கேட்க மனமில்லேயாம். ஆர அமர பாம்பணேமேற் பள்ளி கொண்டவாறே அவர் தம் பாட்டுச் சுவை தேற திருவுளம் கொண்டானும். அதற்காகவே திருவரங்கத்திற்கு வந்து விட்டானும்.

அதேபோல, மூன்ரும் பாட்டில் வரும்,

"மந்தி பாய்வட வேங்கட மாமலே
வானவர்கள்
சாந்தி செய்ய நின் ருன்அ ரங்கத்தர
வினணேயான்"

என்ற அடிகளோடு, "விண்ணவர் கோன் விரையார் பொழில் வேங்கடவன்" என்ற முதற் பாடலடியையும் சேர்த்து பராசரபட்டர் அருமையான மற்ருெரு உரையையும் அருளியுள்ளார். முதலில் திருப்பாணுழ்வார் விண்ணவர் தலேவனேப் பாடத் தொடங்கினுர். அவனே திருவேங்கட மலேக்கு வந்துவிட்டான். ஆழ்வாரும் அவனேப் பின்தொடர்ந்து வந்து திருமலேநாதனேப் போற்றலானுர். அவன் அங்கேயும் நிலேத்திருக்கவில்லே. நேராக திருவரங்கத்திற்கு வந்து பள்ளி கொண்டருளினுனும். ஆழ்வாரும் திருவரங்கம் வந்து அவனேப் பாடத் தலேப்பட்டார். இதன் மூலம், திருப்பாணுழ்வாரின் உள்ளம், விண்ணவர்நாதனிடமும், திருவேங்கடநாதனிடமும், திருவரங்கத்தானிடமும் ஆழங்கால் பட்ட பக்தியுடையவரென்பதை நாம் அறிந்துக்கொள்ளலாம். அதோடு, இறைவன் எங்கிருந்தாலும், எங்கே சென்ருலும் கூடவே செல்லத் துடிக்கும் ஆழ்வாரின் "கற்புள்ளம்" நன்கு புலனுகிறது. கற்புடை மகளிர் கணவனே மட்டிலும் தொழுதேத்தும் பண்ணினர். ஆழ்வார் எம்பெருமானேயன்றிப் பிற தெய்வத்தை மறந்தும் புறந்தொழாத கொள்கையினர்.

மூன்று, நான்கு, ஐந்து ஆகிய பாடல்களில் முறையே அரங்கத்தம்மானின் உந்தி, திருவயிற்று உதர பந்தம், திருவார மார்பு ஆகியவற்றின் அழகில் தாம் ஆட்பட்டுப்போன தன்மையைப் பகர்கின்ருர் திருப்பாணுழ்வார்.

ஆருவது பாடலில், 'அண்டரண்ட பகிரண்டத்து ஒரு மாநிலம் எழுமால் வரை முற்றும் உண்ட கண்டம்' தம்மை உய்யக் கொண்டதாகக் கூறுகிருர். மீண்டும் ஒன்பதாம் பாட்டில், ஆல மாமரத்தினிலே மேல் ஒரு பாலகனுய் ஞாலமேழும் உண்டானது முடிவில்லதோரெழில் நீலமேனி தம் நெஞ்சில் நிறை கொண்டதாகப் பகர்வார். இறைவன் பிரளய காலத்தில் கடல் நீரினின்றும் எல்லாப் பொருள்களேயும் தம் வயிற்றில் அடக்கி வைத்திருந்து காப்பாற்றியருள்வது போலவே, அடியாரைச் சம்சாரச் சாகரத்தினின்றும் தடுத்தாட் கொள்ள வல்லவன்.

ஆரும் திருப்பாட்டில், "துண்ட வெண் பிறையன் துயர் தீர்த்தவன்" என்று அரங்க நகர் மேய அப்பனேப் பற்றிக் கூறுகிருர் ஆழ்வார். இங்கே சிவபெருமானுக்கு பாப விமோசனம் அளித்த வரலாறு பேசப்படுகிறது. முதலில் சிவபெருமானுக்கு இருப்ப

தைப்போலவே பிரம்மனுக்கும் ஐந்து தலைகள் இருந்தனவாம். அதனால் சில குழப்பங்கள் நேரவே சிவபிரான் பிரம்மனின் ஒரு தலையைக் கிள்ளி எடுத்துவிட்டான். அது அவன் கையிலேயே பிரம்மஹத்தி தோஷமாக ஒட்டிக் கொண்டுவிட்டது. என்றைக்கு அக் கபாலம் நிறைய பிச்சை எடுக்க முடிகிறதோ அன்றே அக் கபாலம் சிவபிரானின் கையைவிட்டுத் தொலையுமென்று முனிவரும், தேவரும் கூறக் கேட்டு, பல காலம் பல தலங்களிலும் பிச்சை ஏற்றுத் திரிய, பத்ரிகாச்ரமத்தில் எழுந்தருளியுள்ள நாராயணமூர்த்தியை வணங்கி இரந்தபோது அப்பெருமாள் தன் மார்பினை நகத்தால் கீறி, சிறிது குருதியை 'அட்சயம்' என்று பிச்சையிட்டார். உடனே கபாலம் நிறைந்து சிவபிரானின் கையைவிட்டு அகன்றது. இவ்வரலாறு ஸ்ரீமந் நாராயணனுடைய பரதத்துவத்தை வெளிப்படுத்துகின்றது.

பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானத்தின்கண், 'சந்திரனுடைய சயத்தைப் போக்கினான்' என்ற பொருள் கூறப்பட்டுள்ளதால், 'துண்டவெண்பிறையின்' என்றும் பாடமுமுண்டு என்பதறியலாகும்.

ஏழாவது பாடல் எம்பெருமானைப் பற்றிய மிகவும் அழகிய வருணனை கொண்டது. அப்பெருமாளின் செய்யவாய் ஆழ்வாரின் சிந்தையைக் கவர்ந்தவிதம் சொல்லால் விவரிக்க ஒண்ணாததாய் இருந்திருக்க வேண்டும். அதனால் அவர் 'ஐயோ!' என்று வியப்புச் சொல்லைப் பயன்படுத்தியுள்ளார். அவரைக் கவர்ந்த செவ்வாய்க் குரியவர்.

''கையி னார்சுரி சங்கன லாழியர் நீள்
வரைபோல்
மெய்யனார் துளபவிரை யார்கமழ்
நீள்முடிஎம்
ஐயனார் அணியரங்கனார் அரவி னணை
மிசை மேய மாயனார்!''

அடடா, இத்தெய்வத் தமிழ்ப் பனுவல் தேனாய்த் தீங்கரும்பாய்த் தித்திக்கிறதல்லவா!

எட்டாவது பாடலிலோ ஆழ்வார் இன்னும் ஒருபடி மேலே போய்,

''அரங்கத்தமலன் முகத்து கரியவாகிப்
புடைபரந்து மிளிர்ந்து
செவ்வரியோடி நீண்ட அப்
பெரியவாயகண்கள் என்னைப்
பேதைமை செய்தனவே''

என்று தம்மனம் பேதலித்துப் போன தன்மையைப் பகர்கின்றார். இப்பாடலில், பிரகலாதனுக்காகத் தூணினின்றும் நரசிங்கராக வெளிப்போந்து இரணியனின் உடலைக் கிழித்துக் கொன்ற கதை நினைவுறுத்தப்படுகின்றது. அமரர்க்கு அரிய ஆதிப்பிரான் சிறு பாலகனாகிய பிரகலாதனின் பக்திக்கு எளியனாகி வந்த நீர்மை அனைவராலும் அறியத் தக்கதாகும்.

ஒன்பதாம் பாடலிலும் இன்னொரு முறை திருப்பாணாழ்வார் அரங்கத்தரவினணையானின் நீலமேனி அழகை விவரிக்கத் தெரியாதவராய் 'ஐயோ' என்று ஓலமிடக் காண்கிறோம். இங்கே ஐயோ என்ற சொல் அவலத்தைக் குறிக்கவில்லை. ஆண்டவனின் எல்லையற்ற அழகையும், ஆழ்வாரால் அவன் எழிலைச் சொல்லால் விவரிக்க இயலாத இயலாமையையும் விளக்குவதாக உள்ளது.

இறுதியான பத்தாவது பாடலில் அணியரங்கனைக் கண்ட கண்களால் இனி மற்றொன்றினைக் காண்பதில்லையென்ற வைராக்கியத்தை வெளிப்படுத்துகின்றார் ஆழ்வார். கண்கள் பெற்ற பயன் கருணாமூர்த்தியைக் காண்பதேயன்றோ. அவனைக் கண்ட கண்கள் பிறிதொன்றினை நாடுவதும் உண்டோ?

''கொண்டல் வண்ணனைக் கோவல
னாய் வெண்ணெ
யுண்ட வாயன் என் னுள்ளம்க
வர்ந்தானை
அண்டர் கோன் அணி யரங்கன் என்
னமுதினைக்
கண்ட கண்கள் மற் றொன்றினைக்
காணாவே''

என்ற அப்பாட்டினைப் பாடும்போது நமக்கும் ஆழ்வாருக்கேற்பட்ட வைராக்கிய சிந்தையே வாய்க்கிறதல்லவா!

திருப்பாணாழ்வார் ஸ்ரீமந்நாராயணனுடைய திருமார்பில் விளங்கும் ஸ்ரீவத்சத்தின் அம்சமாய்த் தோன்றியவர். வீணா கானத்தால் வேணு கோபாலனைக் கவர்ந்தவர். ஆண்டாளைப்போலவே ஆண்டவனோடு ஐக்கியமாகும் பேறு பெற்றவர். அவர்தம் விழுமிய வாழ்வறிந்த நாம் அடியார் தம்முள் ஏற்றத்தாழ்வு பாராது, ஆண்டவன் முன் அனைத்துயிரும் சமம் என்பதுணர்ந்து அரங்கநாதன் புகழ்பாடி, வாழ்வாங்கு வாழ்வோமாக.

''காட்டவே கண்ட பாத கமலம்
நல் லாடை உந்தி
தேட்டரு முதர பந்தம் திருமார்பு
கண்டம் செவ்வாய்
வாட்டமில் கண்கள் மேனி முனி
யேறித் தனிபு குந்து
பாட்டினால் கண்டு வாழும் பாணர்
தாள் பரவினோமே''

— திருமலை நம்பிகள்.



# அரங்கநகர் வைபவமும் திருமழிசையாழ்வாரின் அநுபவமும்

'திருச்சந்த விருத்தம்' அருளிய திருமழிசை ஆழ்வாரை நம் மனம், மொழி, மெய்யால் சேவித்து, அவர் சேவித்த 'அரங்க நகரை' அடைவோம். பேரும் புகழும் பெற்ற இந்நகருக்கு ஸ்ரீரங்கம் எனவும் திருவரங்கம் என்றும் பெயர் உண்டு.

தமிழகத்தின் பெருமைக்கு ஒரு கலங்கரை விளக்காக விளங்குவன புனிதமான தேவாலயங்களாகும். தமிழகத் தேவாலயங்கள் பாரதநாட்டின் கலாசாரத்திற்கும், கலைக்கும் எடுத்துக் காட்டு. தேவாலயங்களுக்கு ஏற்பட்ட புகழுக்கும் சிறப்பிற்கும் காரணம் நம் பன்னிரு ஆழ்வார்களும், அறுபத்து மூன்று நாயன்மார்களும், சமய ஆசாரிய புருஷர்களே ஆவர்.

டாக்டர். ஜி. டி. கோபாலகிருஷ்ண நாயுடு, திருப்பதி.

ஆழ்வார்களில்திருமழிசைப் பிரான் அருளிய 'திருச்சந்த விருத்தம்' 120 பாசுரங்களைக் கொண்டது. அவற்றுள் திருவரங்கனைப் போற்றும் பாசுரங்கள் பாராட்டுக்குரியன.

அரங்க நகரில் கோயில் கொண்ட ஆண்டவன் தாமாகவே தோன்றியிருப்பதாக ஐதீகம். இத்தலம் ஸ்வயம் வியக்த தலம் எனப்படும்.

திருஅரங்கத்தை 'கோயில்' எனப் போற்றும் பண்பு வெகு காலமாக உண்டு. இந்நகர் 108 வைணவத் தலங்களில் முக்கியமான ஒன்று. ஆழ்வார்கள் பன்னிருவரில் மதுரகவி ஆழ்வாரைத் தவிர, மற்ற பதினொரு ஆழ்வார்களும் திருவரங்கநாதனைப் பாசுரங்களால் போற்றியுள்ளனர். பிள்ளை லோகாசாரியார், பெரிய நம்பி, பட்டர் முதலியோர் இத்தலத்தில் பிறந்தவராவர்.

கம்பர் தமது இராமாயணத்தைத் திருவரங்கம் பெரிய கோயிலில் அரங்கேற்றினார் என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும். சுக்ர பகவான் பூசித்தத் தலம் திருஅரங்கம். இத்தலத்தில் கோயில் கொண்ட அரங்கநாதர் பேரும் புகழும் மேன்மையும் பெற்றவர். இரண்டு ஆறுகளுக்கு நடுவில் அமைந்த இடத்தைப் பழந்தமிழர் 'அரங்கம்' என்பர். காவிரி கொள்ளிடம் ஆகிய இரண்டு ஆறுகளுக்கு நடுவில் அமைந்த தலத்தை 'அரங்கம்' எனத் தமிழர் அழைத்தனர். பின்னர் 'திரு' என்னும் அடைமொழி சேர்த்து, 'திருவரங்கம்' என்று அழைக்கப் பெற்றது. அரங்கநாதர் இத்தலத்தில் பள்ளிகொண்டது கண்கொள்ளாக் காட்சி. தமிழ்நாட்டில், திருச்சி, நகருக்கு அருகில் மூன்று கல் தொலைவில் உள்ளது ஸ்ரீரங்கம்.

இக்காட்சியை நம் மனக்கண் முன் வைக்கிறார், தொண்டரடிப் பொடியாழ்வார்.

''கங்கையிற் புனிதமாய காவிரி நடவு பாட்டு,
பொங்குநீர் பரந்து பாயும் பூம்பொழில் அரங்கம் தன்னுள்
எங்கள்மால் இறைவன் ஈசன் கிடந்த தோர் கிடைக்கை கண்டு
எங்கனம் மறந்து வாழ்கேன், ஏழையேன் ஏழையேனே.''

திருக்கச்சி என்ற உத்தமர், ஓர் சிறந்த வைணவ பக்தர். ஆண்டவர் வரதராஜரிடம் நேரில் பேசும் பெரியோர்; அவர் அருளிச் செய்த தனியன் திருமழிசையாழ்வாரையும், அவர் அவதரித்த திருமழிசை நகரையும் பாராட்டிய தனியனை இதனடியில் காண்போம்:

''தருச்சந்தப் பொழில் தழுவு தாரணியின் துயர் தீர
திருச்சந்த விருத்தஞ் செய் திருமழிசைப் பரன் வருமூர்
கருச்சத்தும் காரகிலுங் கமழ் கோங்கும் மணநாறும்
திருச்சத்தத்துடன் மருவு திருமழிசை வளம் பதியே''.

கல்பதரு, சந்தனம் முதலிய மரங்களால் சூழப்பட்ட அழகிய சோலைகளுடைய பூமி; அதில் வசிப்பவருடைய துக்கம் தீரும்படியாக 'திருச்சந்த விருத்தம்' என்னும் திவ்ய ப்ரபந்தத்தைச் செய்தருளிய திருமழிசைப் பிரான் திருவவதரித்த திவ்ய தேசம் திருமழிசை. அவ்வூரில் பெருமை தங்கிய சந்தன மரங்களும், கறுத்த அகிற்கட்டைகளும், மணம் மிக்க கோங்கு மரங்களும், பரிமளத்தை வீசுகின்றன. வேரி மாறுத பூவின் மேலிருக்கும் திருமகள் அவ்வூரில் சந்தோஷத்துடன் பொருந்தி வாழ்கிறாள். அவ்வூர் அழகு, செல்வம் முதலியன நிரம்பப் பெற்ற திருநகர். (இத்திருநகர் சென்னை - திருத்தணி சாலையிலுள்ளது.)

இவ்வூரிலுள்ள பெருமாளை, ஆழ்வார் வர்ணிக்கிறார், தமது முதற் பாசுரத்திலே:

''பூநிலாய வைந்துமாய்ப் புனற்கணின்ற நான்குமாய்,
தீநிலாய மூன்றுமாய்ச் சிறந்த காலிரண்டுமாய்,
மீநிலாய தொன்றுமாகி வேறுவேறு தன்மையாய்,
நீநிலாய வண்ண நின்னை யார் நினைக்கவல்லரே?''

''எம்பெருமானே! பூமியில் சப்தம், ஸ்பர்சம், ரூபம், ரஸம், கந்தம் என்கிற குணங்கள் ஐந்துமாயிருக்கிறாய்; நிலம், நீர், தீ, காற்று, ஆகாசம் என்ற ஐந்து பூதங்களுக்கு நீவிர் அந்தராத்மா. இப்படிப் பஞ்ச பூதங்களும்

அவற்றின் குணங்களும் நீ இட்ட வழக்காக இருக்கின்றன. தேவாதி பதார்த்தங்களுக்கும் ஆத்மாவாய் இருக்கின்றாய். இப்படி எல்லாவற்றுக்கும் ஆத்மாவாயிருந்தும் அவை உன்னை அடையாமலிருக்கும் தன்மையை நினைக்க வல்லவர் யார்? இதுதான் ஆழ்வார் அருளிய முதற்பாசுரம். மேலும் பேசுகிறார்: 'அ, உ, ம என்கிற மூன்று எழுத்துள்ள பிரணவத்தில் விளங்குகிற சோதி நீ; என்றும் அழிவற்ற விளக்காகிய அகாரத்திற்குப் பொருளாய் இருப்பவன் நீ; என் சுவாமியே! நீயே, என் மனதிற் புகுந்து, உன்னை உள்ளபடி காட்டிக் கொடுத்தது, என்ன ஆச்சர்யம்!' ஆழ்வார் அநுபவிக்கிறார், தொடர்ந்து:

'' புள்ளதாகி வேதம் நான்கும் ஓதினாய்;
அதன்றியும்,
புள்ளின்வாய் பிளந்து புட்கொடிப்
பிடித்த பின்னரும்,
புள்ளையூர்தி யாதலால் அதென்
சொல்? மின்கொள் நேமியாய்!
புள்ளின் மெய்ப்பகைக்கடல் கிடத்தல்
காதலித்ததே.

'திருவாழியுடையவனே! அன்ன வடிவம் கொண்டு, நான்கு வேதங்களையும் உபதேசித்தாய்; உன்னை விழுங்குவதாக, வாயைத் திறந்து கொண்டு வந்த பகாஸுரனின் வாயைப் பிளந்தாய்; பெரிய திருவடியை வாகனமாகக் கொண்டாய்; கருடனுக்கு இயற்கையான பகைவன் திருவனந்தாழ்வானின் மேலே விரும்பிக் கண் வளர்ந்தாய்.

ஸமுத்ர ஜலத்தில் திருவனந்தாழ்வானை படுக்கையாக விரித்தமர்த்து, தேவர்கள் வந்து உன்னைப் பாடும் படிக் கண் வளர்ந்தீர். பிறகு நிலத்திற்றெழுந்தருளி, திருஅரங்கத்தில் அனந்தாழ் வானொடு யோக நித்திரை செய்கின்றீர்.

எம்பெருமானே நீவிர் மேன்மை, நீர்மை இரண்டோடும் கூடியவனன்றோ!'

பிறகு ஆழ்வார் கிருஷ்ணாவதாரத்தில் ஈடுபடுகிறார்: 'கிருஷ்ணா! அரங்க நகரை ஆளவந்தீர்! திருக்கையிலே திருவாழியானைக் கொண்டீர். ஜலத்திலே உலாவுகின்ற மீனாகவும், ஆமையாகவும் அவதரித்துப் பெருமை பெற்றாய்! மிகுந்த அன்பைக் காட்டினாய்; இடைச்சியான யசோதைப் பிராட்டிக்குப் பிள்ளையாகப் பிறந்தாய். யாவருக்கும் சுவாமியாகத் திருவரங்கத்தில் காட்சியளிக்கிறீர்.

மீளாக் கோபமே உருவாகிய குவலயாபீடமென்னும் யானையினுடைய தந்தங்களை ஒடித்து, அதனைக் கொன்றாய். மஹா கொடிய கம்சனை அழித்தாய். வஞ்சனையாலே வந்த பூதனையினுடைய முலைப்பாலுங்கிற பாவனையாக அவள் உயிரைப் போக்கினாய். பூமியை மூவடிகளால் அளந்து கொண்ட திருவடிகளையுடையவனே! அரங்கனே! கருத்த நிறத்தினாய் திருவரங்கத்தில் உறங்குகின்றாய்!'

இவ்வாழ்வார் அநுபவிக்கத்தக்க ஒரு திவ்ய தேசத்தைக் காட்ட நினைத்த எம்பெருமான், திருவரங்கம் பெரிய கோயிலைக் காட்டிக்கொடுக்கக் கண்ட ஆழ்வார் திருவரங்கத்தை இனிதாக அநுபவிக்கிறார்:

'' கொண்டைகொண்ட கோதைமீது
தேனுலாவு கூனிகூன்,
உண்டைகொண் டரங்கவோட்டி உள்
மகிழ்ந்த நாதனூர்
நண்டையுண்டு நாரைபேர வாளைபாய
நீலமே,
அண்டைகொண்டு கெண்டைமேயும்
அந்த ணீரரங்கமே.''

'மயிர் முடியிலே வைத்திருக்கிற மாலையின் மேலே வண்டுகள் உலாவப் பெற்ற கூனியினுடைய முதுகிலிருந்த கூனை, வில்லிலே உண்டையைக் கொண்டு, கூன் உள்ளே புகும்படி எய்து, ஸ்ரீராமன் உகந்தான். அத் தேசமே ஸ்ரீரங்கம். இயற்கையில் நாரையானது நண்டைத் தின்று களிப்படைகின்றதாம்; வாளை மீனானது நாரையைக் கண்டு துள்ளுகிறதாம்; கரு நெய்தல்களை அரணாகக் கொண்டு, கெண்டை மீன்கள் மேய்கின்றனவாம். அப்படி அழகிய குளிர்ந்த நீர் வளத்தையுடைய ஸ்ரீரங்கத்தின் மேன்மை சொல்லி முடியாது.'

'' வெண்டிரைக் கருங்கடல் சிவந்து
வேவமுன்னோர் நாள்
திண்டிறற் சிலைக்கைவாளி விட்டவீரர்
சேருமூர்
எண்டிசைக் கணங்களும் இறைஞ்சி
யாடு தீர்த்தநீர்
வண்டிரைத்த சோலைவேலி மன்னு
சீரரங்கமே.''

'வெளுத்திருக்கிற அலைகளையுடைய, கருத்த சமுத்திரமானது, அம்பிலிருந்து கிளம்பும் நெருப்பாலே சிவந்து வெந்துபோம்படி மிக்க வலிமையுடைய சார்ங்கத்தில் நின்றும் அம்புகளைப் பிரயோகித்து மஹா வீரனான ஸ்ரீராமன் வாழ்கின்ற தேசம் திருவரங்கம். எட்டு திக்குக்களிலுமுள்ள பக்தர்கள் திருவடி தொழுது தீர்த்தமாடுகிற பரிசுத்தமான ஜலத்தையுடையதும், வண்டுகள் சப்திக்கின்றதுமான சோலைகளை வேலியாகவுடைய அழகு பொருந்தியது திருவரங்கம்.

அன்பே உருக்கொண்டு மீண்டும் பாடுகிறார், திருமழிசைப் பிரான்;

'' சரங்களைத் துரந்து வில்வளைத்து
இலங்கை மன்னவன்
.....................
அரங்கமென்பர் நான்முகத்தயன்
பணிந்த கோயிலே.''

வில் வளைத்து அம்புகளை ஏவி, இலங்கைக்கு அரசனான இராவணனுடைய பத்துத் தலைகளை வெட்டி விழப் பண்ணின வீரச் செல்வமுடைய ஸ்ரீராமன் நித்ய வாஸம் செய்கிற, விரும்பத்தக்க இடம் ஸ்ரீரங்கமே. அப்பதியில் பொன்னைக் கொழித்துக் கொண்டு வந்து அலை வீசும் திருக்காவிரி நதி பாய்கின்றது. சதுர்முகனான ப்ரம்மன் வணங்கும் கோயில்

திருவரங்கம் என்று ஞானிகள் கூறுவர்.

இனி, திருவரங்கனைக் கிருஷ்ணனாக பாவிக்கிறார், நம் ஆழ்வார்.

"பொற்றையுற்ற முற்றல் யானை
போரெதிர்ந்து வந்ததை
பற்றியுற்று மற்றதன் மருப்பொசித்த
பாகனூர்,
சிற்றெயிற்று முற்றல் மூங்கில் மூன்று
தண்ட ரொன்றினர்
அற்றபற்றர் சுற்றி வாழும் அந்தணீர
ரங்கமே."

'வலிமிக்க குவலயாபீட யானை யானது எதிர்த்து வர, அவ்யானையை உறுதியாகப் பிடித்து அதனுடைய தந்தங்களை முறித்தெறிந்த ஸ்ரீகிருஷ்ணன் வாழ்கின்ற தேசம் ஸ்ரீரங்கம். சிறிய பற்களைப் போன்ற கணுக்களுடைய, மூங்கிலால் செய்யப்பட்ட...... ...த்ரிதண்டத்தையுடைய சன்யாசிகளும், ஏகாந்திகளும், பற்று அற்றவர்களும் சூழ்ந்து வாழுமிடமான அழகியதாய் குளிர்ந்த தீர்த்தத்தையுடையது ஸ்ரீரங்கம்.'

மீண்டும், திருஅரங்கத்தை விளக்குகிறார், திருமழிசை ஆழ்வார்.

"....................
வாணனாயிரங் கரங்கழித்த வாதிமால்
பீடுகோயில் கூடுநீர் அரங்கமென்ற
பேரதே."

'பாணாசுரனுடைய ஆயிரம் கைகளையும் வெட்டின காரண பூதனான ஸ்ரீ கிருஷ்ணன் வாழ்கின்ற இடம் ஸ்ரீரங்கம்; பெருமை தங்கிய பெரிய கோயில்; அதிக நீர் நிறைந்த காவிரியோடு கூடின திருவரங்கம்.'

அரங்கநாதனை ஸ்ரீராமன் எனப் போற்றுகிறார் ஆழ்வார்;

"இலைத்தலைச் சரந்துரந்து இலங்கை
கட்டழித்தவன்,
மலைத்தலைப் பிறந்திழிந்து வந்து
நுந்து சந்தனம்
குலைத்தலைத் திறுத்தெறிந்த
குங்குமக் குழம்பினோடு
அலைத்தொழுகு காவிரி அரங்கமேய
வண்ணலே."

இலை போலிருக்கிற நுனியையுடைய அம்புகள் ஏவி இலங்கையினுடைய அரணை அழியச் செய்தவன், ஸ்ரீராமன். அப்பெம்மான் ஸ்ரீரங்கத்தில் எழுந்தருளியுள்ளான்". அங்கு காவிரி பாய்கின்றது. அக்காவேரி குடகு மலையில் அவதரித்து, இறங்கி வந்து, சந்தன மரங்களைப் பேர்த்துத் தள்ளிக் கொண்டு வருகிறது. குங்குமக் கொடிகள் முறிந்து, அதிலிருந்து வெளிப்படும் குங்குமம் குழம்போடே, அலை மோதிக்கொண்டு வரும் காவேரியே ஸ்ரீரங்கத்தில் பாய்கிறது. எம்பெருமானே! நீ அடியார்களைக் காக்க அத்திருவரங்கத்தில் திருக்கண் வளர்ந்தருள்கிறாய்.

"உன்னபாத மென்னசிந்தை மன்ன
வைத்து நல்கினாய்
பொன்னிசூழ் அரங்கமேய புண்டரீக
னல்லையே."

'உன்னுடைய திருவடிகளை என்னுடைய நெஞ்சினுள்ளே பொருந்த வைத்து, அருள் செய்த பெருமானே! நீவிர் காவிரி சூழ்ந்த திருவரங்கத்தில் எழுந்தருளியிருக்கிற, தாமரை போன்ற அவயவங்களையுடைய தேவனன்றோ?'

அரங்கனைக் 'கரும்பிருந்த கட்டியே' என அழைக்கும் பாசுரத்தை பகர்வோம்:

"கரும்பரங்கு தண்டுழாய் நுழைந்த
லர்ந்த பாதமே!
விரும்பிநின் றிறைஞ்சுவேற்கு இரங்க
ரங்க வாணனே!
கரும்பிருந்த கட்டியே! கடற்கிடந்த
கணணனே!
இரும்பரங்க வெஞ்சரந்துரந்த வில்லி
ராமனே."

'எல்லாப் பகுதியிலும் கரும்பு போலே, இயற்கையிலேயே இனியதாயிருக்கும் சர்க்கரைக் கட்டி போலிருப்பவனே! திருப்பாற்கடலிலே திருக்கண் வளர்ந்தருளும் சுலபனே! இரும்பு போல் வலிய அரக்கர்களின் உடல்கள் அழியும்படி பாணங்களை எய்த ஸ்ரீசார்ங்கவில்லையுடையவனே! அரங்க நகரப்பனே! வண்டுகள் படிந்திருக்கப் பெற்றதாய், குளிர்ந்திருக்கிறதான திருத்துழாயானது ஸ்பர்சிக்கப் பெற்றவுடன் மலரும் உன்னுடைய திருவடிகளையே ஆசைப்பட்டு, என்றும் நின்று துதிக்க அருள்தரவும்.'

திருமழிசை ஆழ்வார் தன் 119வது பாசுரத்தில் இறைவனைப் புகழ்கிறார்:

"பொன்னிசூழ் அரங்கமேய பூவை
வணண மாயா! கேள்;
என்னதாவி யென்னும் வல்வினை
யினுட் கொழுந்தெழுந்து,
உன்னபாத மென்னநின்ற ஒண்சுடர்க்
கொழுமலர்
மன்னவந்து பூணடுவாட்ட மின்றி
யெங்கும் நின்றதே."

'திருக்காவேரியாலே சூழப்பட்டிருக்கிற திருவரங்கத்திலே எழுந்தருளியிருக்கிற காயாம்பூப் போன்ற ஆச்சர்ய பூதரான பெரிய பெருமாளே! கேள்! என்னுடைய ஆத்மா வலிய பாவக்குழியிலுள்ளே, உன்னைக் குறித்து, சிரத்தை என்னும் முளை எழுந்து தேவரீருடைய திருவடியென்கிற அழகிய சுடர்மிக்க புஷ்பத்திலே ஸ்திரமாக வந்து படிந்து, தேவரீருடைய விபூதிகளெல்லாவற்றிலும் குறையாமல் வியாபியா நின்றது.'

இறுதிக்கு வந்தோம். திருமழிசை ஆழ்வாரின் உயர்ந்த கருத்துகளைக் கண்டோம். திருஅரங்கனை ஆழ்வாரைக் கொண்டு அநுபவித்தோம். ஆழ்வார் திருவடிகளே சரணம்.



# கூத்தனின் குதூகலம்

இறைவனின் பெரும்புகழை ஓதியுணர்ந்த அருளாளர்கள் மண்ணுலகில் அல்லல் உறுவதைக் கண்டு பிறவாமையைத் தந்தருள வேண்டுகின்றனர்.

மனிதனின் மண்ணுலக வாழ்வின் வாழ்நாளை நூறாகப் பகுத்துக் கொண்டால், அதில் பாதி உறக்கத்தால் கழிந்துவிடுகிறது. பதினைந்து ஆண்டுகள் குழந்தைப் பருவத்திலும், ஒன்றுமறியாத பேதைப் பருவத்திலும் கழிந்துவிடுகிறது. எஞ்சிய நாட்களோ பசியாலும், பிணியாலும், மூப்பாலும், துன்பத்தாலும் சிக்குண்டுத் தவிக்கும் மானிட தத்துவத்தை அறிந்து, தொண்டரடிப் பொடியாழ்வார், 'இறைவா! எனக்கு பிறவாமையைத் தந்தருள்வாயாக' என்று வேண்டுகிறார்.

"வேதநூல் பிராயம்நூறு மனிசர்தாம் புகுவரேலும்
பாதியும் உறங்கிப்போகும் நின்றதில் பதினையாண்டு
பேதை பாலகன் அதாகும் பிணி, பசி, மூப்புத் துன்பம்
ஆதலால் பிறவி வேண்டேன் அரங்கமாநகருளானே!"

மண்ணுலக வாழ்வை நமக்காக்கிப் படைத்து, காத்து, அழித்து மறைந்து, அருளும் ஐந்தொழிலைச் செய்யும் இறைவன் ஆனந்தக் கூத்தாடும் குதூகலத்தைச் செய்கிறான். அப்பெரு விளையாட்டைச் செய்யும் இறைவனை ஊனக் கண்களால் காணவே கூத்தாடும் ஆடலரசாக நடராசப் பெருமான் நமக்குக் காட்சியளிக்கிறான்.

அவன் ஓங்கார வடிவத்தில் உள்ள திருவாசியில் ஆடிக்கொண்டு இருக்கிறான். ஒலிக்கின்ற துடியை கையில் ஏந்தியுள்ளான். அது இவ்வுலக உயிர்களைத்தானே படைத்துள்ளான்என்பதை உணர்த்துவதாகும். இதைத்தான் 'தோற்றம் துடியதனில்' என்று உண்மை விளக்கம் என்ற சித்தாந்த நூல் தெளிவாக்குகிறது.

நடராசப் பெருமானின் அபய முத்திரை உயிர்களின் அச்சத்தைப் போக்கிக் காட்டுகிறது. இதையே 'அமைத்தல் திதியாம்' என்று திருமூலர் குறிப்பிடுகிறார். குமரகுருபரர் இக்காட்சியை 'தனித்தனி வகுத்த சராசரப் பகுதி அனைத்தையும் காப்பதுன் அமைத்த பொற்கரமே' என்று பேசிக் காட்டுகிறார்.

நடராசப் பெருமானின் கையில் உள்ள தீச்சுடரோ, உயிர் பாசத்திலிருந்து நீங்கிய நிலையில் அழிக்கும் நிலையைக் காட்டுகிறது என்று காமிக ஆகமம் விளக்குகிறது. 'அரன் அங்கி தன்னில் அறையில் சங்காரம்' என்று திருமந்திரம் தத்துவத்தை விளக்கிக் காட்டுகிறது.

நடனமாடும் தூக்கிய திருவடி ஆன்மா மலத்திலிருந்து நீங்கியதையும், உயிர்கள் மாட்டுக் காட்டும் அருளையும் காட்டுகிறது. ஊன்றிய திருவடி ஆன்மாவை மறைத்தலைக் காட்டுகிறது. பாதத்தில் மிதித்துக் கொண்டிருக்கும் முயலகனின் உருவம் மண்ணுலக உயிர்களைச் சுட்டுகிறது.

இறைவனை 'பதி' என்று அழைக்கிறோம். செம்பில் களிம்பு போல அழுக்கை உடைய உயிரை 'பசு' என்றழைக்கிறோம். 'பசு' என்கிற உயிர், பதி என்கிற இறைவனின் அடையாமல், ஆணவம், கன்மம் மாயை என்கிற மும்மலங்களால் கட்டுண்டு இருப்பதை 'பாசம்' அல்லது 'தளை' என்கிறோம்.

பசுவாகிய உயிர் மும்மலங்களிலிருந்து நீங்கி, பதியாகிய இறைவனை அடையும் ஒப்பற்ற நிலையைக் காட்டுவதே நடராசப் பெருமானின் கூத்தின் குதூகலக் காட்சியாகும்.

முப்பொருளையும், வாழ்வியலையும் உணர்த்தவே இறைவன் ஆடும் அரசாகக் காட்சி தருகிறான். ஆடுகின்ற இறைவன் மன்னுயிர்களை ஆட்டுவிக்கின்றான். ஐம்பெரும் தொழிலை இடைவிடாது செய்து கொண்டிருக்கிறான் என்று உணர்த்தவே ஆடற்பெருமான் ஆடிக் கொண்டிருக்கிறான். தானும் இயங்குகிறான். தன்னுலகையும் இயக்கிக் கொண்டிருக்கிறான்.

ஆடற்பெருமானின் குதூகல கூத்தால் உயிர்கள் மும்மலத்தினின்று விடுபட்டு, பேரருளைப் பெற்று, 'பதி' ஆகிய இறைவனை அடைகிறது என்ற தத்துவத்தை மனிதனுக்குக் காணும் தோறும் கற்பிப்பதற்காகவே அமைந்த திருவுருவமாக விளங்குவதே, நடராசப் பெருமானின் திருஉருவமாகும். அப்பெருமானை நாளும் வழிபட்டு உய்வோமாக!

**திரு. மா. கல்யாணராமன்,** - தேரழுந்தூர்.

பாரதத்தில் காஷ்மீர் முதல் கன்னியாகுமரி வரை, குஜராத் தொடங்கி காமரூபம் வரை கொண்டாடப்படும் அகில இந்தியப் பண்டிகைகளுள் முதன்மை பெற்று விளங்குவது தீபாவளியாகும். அது உண்மையில் ஒரு ஹிந்து பண்டிகையே யானுலும் பகவான் புத்தர் அமரரானது தீபாவளியன்றுதான் எனக்கூறிக் கொண்டு பௌத்தர்களும், மகாவீரர் உலக வாழ்வை நீத்தது தீபாவளியன்றுதான் எனக் காரணம் கூறிக்கொண்டு ஜைனர்களும்கூட இப்பண்டிகையைக் கொண்டாடுகின்றனர். இதனுல், ஹிந்து பண்டிகைகளுள் மற்றெதற்குமில்லாத ஒரு தனி மகத்துவம் தீபாவளிக்குண்டு.

ஐந்து நாள் பண்டிகை :

பொதுவாகத் தீபாவளி நம் பக்கம் நரக சதுர்த்தி, தீபாவளி என இரண்டே நாள் பண்டிகையாகத்தான் கொண்டாடப்படுகிறது. ஆனுல் வட நாட்டிலோ ஐந்து நாள் பண்டிகை. தீபாவளி தினத்திற்கு முன் இரண்டு நாள், பின் இரண்டு நாள் சேர்த்து ஐந்து நாள் பண்டிகை. அதன் விவரம் பின்வருமாறு—

1. தனதேரஸ்—அதாவது தனதிரயோதசி, 2. நரகசௌதஸ்—அதாவது நரக சதுர்த்தி, 3. தீபாவளி, 4. கோவர்த்தன் பூஜா—கோவர்த்தன பூஜை, 5. பையா தூஜ்—சகோதரன் துவிதியை.

பதைச் சரியானபடி யாரும் விளக்கிக் கூறுகிறுர்களில்லை.

நரக சதுர்த்தி :

இதைச் சின்ன தீபாவளி (சோட்டி தீபாவளி) எனக் கூறுகிறுர்கள். அன்று மாலை அஸ்தமித்ததும் கோதுமை மாவால் ஒரு விளக்குச் செய்து அதில் எண்ணெய் அல்லது நெய் வார்த்து நான்கு திசைக்கும் நான்கு திரியிட்டு விளக்கேற்றி கொல்லைப்புறம் வைப்பார்கள். அந்த விளக்கில் செப்புத்துண்டு அல்லது செப்புக்காசு ஒன்றும் உளுந்து அல்லது அதன் பருப்புப் போட்டு வைப்பார்கள்.

பொரியும், பதாஸா என்னும் ஒரு வகை இனிப்புப் பண்டமும் விளக்கின்

# யக்ஷ - ராத்ரி

சன்மிஷ்டை

பாரதத்தில் ஒரு கோடியிலிருந்து மற்றொரு கோடிக்குச் செல்லுவோமேயானுல் ஒவ்வொரு பக்கமும் ஒவ்வொரு விதமாக அப்பண்டிகை கொண்டாடப்படுவதைக் காணலாம். அப்பண்டிகை கொண்டாடப்படுவதற்கு விதவிதமான காரணங்களைக் கற்பிக்கும் கதைகள் கூறப்படுவதையும் கேட்கலாம்.

நம் தமிழ்நாட்டில் எவ்விதமாகத் தீபாவளி கொண்டாடப்படுகிறது என்பதும், நரகாசுரன்வதம் அதற்குக் காரணமாகக் கூறப்படுகிறது என்பதும் நாமறிவோம். ஆனுல், வட நாட்டில் ஹிந்துக்கள் எவ்விதம் இப்பண்டிகையைக் கொண்டாடுகிறுர்கள், அதற்கு என்ன என்ன காரணங்கள் கூறுகிறுர்கள் என்பது நம்மில் பெரும்பாலோருக்குத் தெரியாது. அது மிகவும் விசித்திரமாகவும் கேட்கச் சுவையாகவும் நமக்குத் தோன்றக் கூடியதொரு விஷயமாகும்.

இவற்றில் 'பையாதூஜ்' என்பது நோன்பு கயிறு அதாவது ரக்ஷை கட்டும் வழக்கமாக நம் நாட்டில் சில இடங்களில் உண்டு. இப்பொழுது இந்த ஐந்து நாள் பண்டிகையையும் அவர்கள் எவ்விதம் கொண்டாடுகிறுர்கள் என்பதையும் சிறிது ஆராய்ந்து கவனிப்போம்.

தனதேரஸ் :

வீட்டில் உள்ள பழைய பாத்திரங்கள், பழைய துணி, பழைய சீப்பு உள்ளிட எல்லா பழைய பொருள்களையும் நீக்கி வீட்டு எல்லாமே புதிதாகத் தேடிக் கொள்ள வேண்டும் என்பது பழைய ஐதிகம். ஆனுல் இக்காலத்தில் செயல் முறையில் இது அவ்வளவாகச் சாத்தியப்படுவதில்லை. ஆனுல், தீபாவளி கொண்டாடுவதற்கான புதிய பாத்திரங்கள், துணிமணிகள், வேறு பொருள்கள் எல்லாமே இத்தினத்தில் வாங்குகிறுர்கள். இதற்குக் காரணம் என்ன என்

முன் வைத்து முறையே பூஜைகள் செய்து சாப்பிடுவார்கள். வீட்டுப் பெண்கள் பிராதன வாயிலின் இரண்டு பக்கமும் சுவற்றில் 5, 5 அல்லது 7, 7 கை முத்திரை இடுவார்கள். பின் எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்வார்கள். நம் பக்கத்தைப் போல் நரகாசுரன் கதை—இந்தச் சின்ன தீபாவளி தினத்துக்குக் கூறப்படுகிறது.

தீபாவளி :

மாலையில் 'ஸ்யோரதி பூஜை' என ஒன்று நடக்கும். தேங்காய் ஓட்டைச் சுட்டு அந்தச்சுட்டக் கரியைப்பாலில் கரைத்து அல்லது நனைத்துச் சுவற்றில் 'ஸ்யோரதி' உருவம் தீட்டுவார்கள். அந்த உருவத்திற்கு சந்தனம், குங்குமம், மஞ்சள் சாற்றி பூஜை நடத்துவார்கள்.

சூரியன், சந்திரன், கங்காதேவி, கணேசர், லக்ஷ்மி, சிவன், பார்வதி, ஹனுமான், துளசி பூஜை செய்யும் ஒரு பெண், ஸ்ரவண குமார், பால்

கறக்கும் ஒரு ஆண், யானை, கிளி போன்ற உருவங்களை சுவற்றில் வரைந்து—அவை எல்லாவற்றிற்கும் மேலே ஸ்ரீ கணேசாய நம: என்று எழுதுவார்கள். இவைகளைச்சுவற்றில் வரைய ஆட்கள் இருக்கிறார்கள் என்பது குறிப்பு. 'ஸ்யோரதி' என்பது இதுவேயாகும்.

சுவற்றில் தீட்டியசித்திரங்களன்றி லக்ஷ்மி, கணேசர் உருவங்களை மாவில் செய்து வைத்தும் பூஜைகள் நடத்துவதுண்டு. விளக்கேற்றிப் பொரியும் பதாஸாவும் வைத்து பூஜைகள் நடத்துவதுமுண்டு. விளக்கு இரவு முழுவதும் அணையாது எரியும். 'மாணிக்க தீயா'—அதாவது 'மாணிக்க தீபம்' எனச் சொல்லுகிறார்கள். அதை இவ்விதம் செய்தால் குடும்பத்திற்கு சகல சம்பத்தும், லக்ஷ்மி கடாக்ஷமும் கிட்டும் என அவர்கள் நம்புகிறார்கள். இதற்காக லக்ஷ்மி சம்பந்தமான பலவித புராணக் கதைகளும் கூறுகிறார்கள்.

தீபாவளி இரவுதான் விளக்கேற்றி 'ஸ்யோரதி பூஜை' நடத்துவார்கள். அப்பொழுது அங்கே ஒரு டம்ளர் அல்லது சொம்பு நிறைய ஜலம் வைப்பார்கள். அந்த ஜலத்தை அடுத்த நாள் காலை அருணோதயம் ஆவதற்கு முன்பாக எடுத்து வீடு முழுவதும் தெளிப்பார்கள். இவ்விதம் தெளித்தானதும் பழைய பீற்றல் முறம் ஒன்றைப் பெண்ணொருத்தி கையில் எடுத்து அதை விறகு அல்லது ஏதாவது கம்பால் தட்டியபடி 'நிக்கரி தரித்தர்! ஆவோ லக்ஷ்மி!' (தரித்திரமே ஓடு! லக்ஷ்மியே வருக!) என்று கூறிக்கொண்டு வீடு முழுவதும் சுற்றுவாள்.

பிறகு அம்முறத்தை வீட்டுக்கு வெளியே வீசி விடுவாள். வீட்டில் உள்ள பழைய விளக்கு, விளக்குமாறு (துடைப்பம்)களையும் அதோடு சேர்த்து வீசி விடுவாள். அதன்மூலம் வீட்டின் தரித்திரம்—பீடை வெளியேற்றப்பட்டு விட்டதாக அவர்கள் நம்பிக்கை. நம் நாட்டிலும் சில இடங்களில் இம்முறை கடைபிடிக்கப்பட்டு வருவதைக் காணலாம்.

**கோவர்த்தன பூஜை :**

தீபாவளிக்கு மறுநாள் அதிகாலையில் எழுந்ததும், அந்தந்த வீட்டுப் பெண்கள் எல்லோரும் அவரவர் வீட்டுத் திண்ணையில் ஒன்று கூடுவார்கள் சாணத்தால் ஒரு சிறு சதுரமான மேடை அமைத்து ஒவ்வொரு பெண்ணும் இரண்டு இரண்டு ஈர்க்குச்சி வீதம் அதில் செருகுவார்கள். அதில் காது கம்மல்கள் போன்று இரண்டு ஆபரணங்களைத் தொங்கவிட்டு, மஞ்சளில் நனைத்த பஞ்சுத்திரியையும் வைப்பார்கள். பிறகு ஒரு புதுமுறத்தில் அரிசி சாதத்தால் செய்த ஒரு வகை லட்டு, கீக்ரி என்னும் ஒரு வகை இனிப்பு நான்கு வைத்து பூஜை செய்வார்கள். இதற்கு 'ஸ்யாகு பூஜை' எனப் பெயர்.

பூஜை முடிந்ததும் கூடியுள்ள பெண்கள் அவரவர் சேலை தலைப்பில் லட்டுகளைப் போட்டு ஆட்டியபடியே 'லடு வாலே! லதுவாதே!' (லட்டுக்களை எடுத்துக்கொள்! பிள்ளை வரம் தா!) எனக்கூறிக் கொண்டு ஒருவருக்கொருவர் அந்த லட்டுக்களைக் கொடுத்து புசிப்பர். இதன் பிறகு சாணத்தில் குத்தியுள்ள ஈர்குச்சிகளை எல்லாம் அகற்றி துடைப்பமாகக்கட்டி, இடது கையைப் பின் பக்கமாகக் கொண்டு போய், அதனுல் அத்துடைப்பத்தைப் பற்றி தரையைக் கூட்ட முயற்சிப்பர். இதை 'சண்டா பஸடா' எனச் சொல்லுவார்கள்.

இவ்விதம் அதிகாலையில் பெண்கள் ஸ்யாகு பூஜை' நடத்திய பிறகு., கோவர்த்தன பூஜைக்கான ஏற்பாடுகளைத் தொடங்குவார்கள் வீட்டின் முற்றம் அல்லது வேறு வசதியான இடத்தில் பசும் சாணத்தால் மனிதனைப் போன்ற ஒரு பெரிய உருவம் செய்வார்கள். அவ்வுருவத்தின் அருகிலேயே சாணத்தால் திரிகை அடுப்பு, குடம், தடி, ஒரு நாய் வேறு சில சிறு உருவங்கள் செய்து வைப்பார்கள் இருட்ட ஆரம்பித்ததும் மனித உருவத்தின் தலையில் விளக்கேற்றி வைப்பார்கள்.

கோவர்த்தனகிரி உருவமும் செய்து வைத்து, அதற்குப் பால், நெய், பலவித மிட்டாய்கள், பதாஸா முதலியவைகளை வைத்து பூஜை நடத்துவார்கள். உருவங்களைச் சுற்றி பஞ்சைப் பரப்பி அதன்மேல் மஞ்சள் பூசிய ஈர்க்குச்சிகளைக் குத்தி வைப்பார்கள். பூஜை முடிந்ததும் 5, 6 முறை அவ்வுருவங்களைச் சுற்றி வலம் வருவார்கள். நாலாபுறமும் ஜலத்தை வீசுவார்கள், மணி அடிப்பார்கள்; தாம்பாளத்தைத் தட்டுவார்கள். குதித்துக் குதித்து ஆடுவார்கள்.

'மானஸி கங்கா-ஸ்ரீ ஹரதேவா!- கிரிவரகி பரிகிரமாதேவ!' எனப் பாடிக்கொண்டே கூத்தாடுவார்கள். இவ்விதம் சுற்றி முடிந்ததும் 'பூச் சரிக்கே லாட்டோ ஜய்!' என எல்லோரும் ஒரே குரலாகக் கூவுவார்கள். இதோடு கோவர்த்தன பண்டிகை முடிந்தது.

**பையாதூஜ் :**

இது கோவர்த்தன பூஜைக்கு மறுநாள் துவிதியையன்று மிகக் கோலாகலமாகக் கொண்டாடப்படுவதாகும். மணமான சகோதரிகள் தங்கள் சகோதரர்களை அன்று விருந்துக்கு அழைப்பார்கள். கோவர்த்தன பூஜை நடந்த இடத்தை மெழுகி சுத்தம் செய்து மஞ்சள் பொடி மாவால் கோலமிட்டு நிறை குடமொன்றை அந்த இடத்தில் வைப்பார்கள். அதன் அருகே சாணத்தால் வீடு போன்று அமைத்து அதில் 'கண்டங்கத்திரி' இலையைப் பரப்புவார்கள். அதன் மேல் சாணத்தால் ஒரு சிறு மனித உருவம் செய்து வைப்பார்கள். அதற்கு 'கௌர்' என்று பெயர்.

பொரி, பதாஸா வைத்து அதை பூஜை செய்வார்கள். அதன் பிறகு பாடிய படியே பூஜையில் வைத்த

(32-ம் பக்கம் பார்க்க)

# மங்கையர்கோன் மங்களாசாஸனம்

நம் தூப்புல் தேசிகன் திருமங்கை மன்னனை திருமந்த்ரார்த்தத்தில் 'வையமெல்லாம் மறை விளங்க வாள் வேலேந்தும் மங்கையர்கோன்' என்று பாடினார். லோகத்தில் இந்த்ராதி தேவதைகளும், மஹரிஷிகளும், மற்ற இராஜாக்களும், மற்றவர்களும் அவரவர்கள் வேதாந்தார்த்தத்தை க்ரஹிப்பதற்கு ப்ரணிபாதபரிப்ரச்நாதிகள் செய்து அஞ்சலிஹஸ்தர்களாய் ஸர்வஸ்வதானம் பண்ணினார்கள் சாஸ்த்ரங்களில் 'தத்வித்திப்ரணிபாதேன பரிப்ரச்னேன ஸேவயா, குருசுச்ரூஷயா வித்யா புஷ்கலேன தனேனவா' என்றல்லவோ கூறப்பட்டிருக்கின்றன. லோக சாஸ்த்ர விலக்ஷணராய் மங்கை மன்னர் ஒருவரே கைகளில் வாளும் வேலும் ஏந்தி அவைகளையே ஸமித்தாக ஸமர்ப்பித்து ச்ரிய: பதியான ஸர்வஜ்ஞனிடத்தில் ஸர்வார்த்தக்ரஹணம் பண்ணினார். 'புவனி முழுவதும் வேதாந்தார்த்தம் விளங்க வாளும் வேலும் ஏந்தி நின்ற ஒரு சிஷ்ய வைலக்ஷண்யம் இருக்கும்படி என்' என்று விஸ்மயிக்கிறார் ஸ்வாமி. ஆழ்வார் அவதரித்த திருநகரி மங்கை. அதில் வாழுமவர் மங்கையர். அவர்களுக்கு ஸ்வாமி மங்கையர்கோன் இங்கு மறை விளங்க 'என்று நிர்த்தேசித்தது யதந்தஸ்தமசேஷேண' என்றபடி எல்லா வேதாந்தார்த்தங்களையும் தன்னுள் அடக்கிக் கொண்டிருக்கும் திருமந்திரத்தின் அர்த்தத்தை இவர் ஸர்வேச்வரன் பக்கல் லாக்ஷாத்கரித்து 'நான் கண்டு கொண்டேன் நாராயணா வென்னும் நாமம்' என்று ப்ரதி பாசுரந்தோறும் பரக்கப் பேசின உபகார விசேஷத்தைத் தெரிவிக்கின்றது.

இவ்விதம் வேதாந்தார்த்தங்களை விளக்கி வரும் இவ்வாழ்வார் நைமிசாரண்யம் சென்று ஒரு காலைப்போல ஒன்பது காலும் திருவடியடைந்தேன் என்றார். ஒன்றும் பலிக்கவில்லை. உடனே பக்தனை தாநவசிசுவை ரக்ஷித்து அவ்வடிவை எல்லார்க்குமாக்கிக் கொண்டிருந்த சிங்க வேழ் குன்றம் சென்றார். சென்றதும் குன்றத்தையே 'அங்கண் ஞால மஞ்ச' என்கிற பாசுரங்களால் மங்களாசாஸனம் பண்ணுகிறார். முதல் பாசுரம் வருமாறு:

**அங்கண் ஞாலமஞ்ச அங்கோராளரி**
**யாய் அவுணன்**
**பொங்கவாகம் வள்ளுகிரால்**
**போழ்ந்த புனிதனிடம்**
**பைங்கணானைக் கொம்பு கொண்டு**
**பத்திமையால்—அடிக்கீழ்ச்**
**செங்கணாளி யிட்டிறைஞ்சும் சிங்க**
**வேள்குன்றமே.**

ப்ரஹ்லாதாழ்வான் ப்ரதிஜ்ஞை பண்ணின அவ்விடத்திலேயே அழகிய தான இடத்தை உடையவராய், ஞாலமெல்லாம் நடுங்கும்படி அபூர்வமான நரஸிம்ஹமூர்த்தியாய்த் தோன்றுகிறான். அதைக் கண்டு ஹிரண்யாஸுரன் கிளர அவனுடைய சரீரத்தை கூர்மையான திரு உகிரால் — நகத்தால்—பிளந்து போட்ட பரிசுத்தனை ஸர்வேச்வரனது இடம் 'சிங்கவேழ் குன்றம். மேலும் சிவந்த கண்களையுடைய சிங்கங்கள் பைங்கணானைத் தந்தங்களைப் பறித்துக் கொண்டு பகவத் பக்தியாலே திருவடிகளிலே ஸமர்ப்பித்து ஆச்ரயித்திருக்கிற சிங்கவேழ் குன்றம் என்று இப்பாசுரத்தின் பொருள்.

மணவாளனாக திருமாமகளுடன் வந்த ஸர்வேச்வரன் பக்கலில் ஸர்வார்த்தக்ரஹணம் பண்ணின திருமங்கையாழ்வார் ஸர்வஜ்ஞராகையால் இவருக்கு முக்காலத்திய விஷயங்களும் கையிற் கனிபோல் விளங்குகின்றன. அதனால் முதற் பாசுரத்தின் முற்பகுதியில் முன் நடந்தவைகளையும் பிற்பகுதியில் பின் நடக்கப் போமவைகளையும் தெளிவாக எடுத்துக் காட்டுகின்றார். அதாவது: முற்பகுதியில் ஸ்ரீ ப்ரஹ்லாதாழ்வான் ப்ரதிஜ்ஞை பண்ணின இடம், ஸடா படலபீஷணராய் இதுவரை காணாத நரமும் சிங்கமும் கலந்த அத்யத்புத ரூபத்தோடு எம்பெருமான் அவதரித்து ஹிரண்யனுடலை நாறு கிழிப் பாரது போல வள் உகிரால் நன்றாகக் கிழித்ததானது எதிரில் தோன்றுகிறது. அதை அப்படியே பாடினார். பிற்பகுதியால் பிற்பாடு தோன்றப் போகும் ஸ்ரீ அஹோபில மடமும் அதில் அவதரிக்கப் போகும் ஸ்ரீ அழகிய சிங்கர்களும் அவர்கள் பகவத் பக்தியால் மாலோலன் திருவாராதனத்தைப் பண்ணிக்கொண்டு மகிழ்ந்திருப்பதுடன் ஜீவரத்னங்களை அவன் திருவடிவாரத்தில் ஸமர்ப்பித்து வருவதையும் கண்ணுற்றார். உடனே பைங்கணானை என்று கவி பாடினார்.

---

*திரு. இல. பாஷ்யம்,*
*திருக்குடந்தை.*

---

இங்கு பெரியவாச்சான்பிள்ளை வ்யாக்யானம்: (கொம்பு கொண்டு) ஆனையினுடைய மஸ்தகத்தைக் கிழித்து அதனுடைய கொமபைப் பறித்து பக்தியாலே திருவடிகளிலே யிட்டு ஆச்ரயிக்கலாயிற்று ஸிம்ஹங்களானவை........... (செங்கணாளி) இவற்றுக் கானைகளின் மேல் சீற்றம் மாறாதேயிருக்கச் செய்தேயும் பகவத் மக்தி ஒருபடிபட்டுச் சொல்லுமா யிற்று. சீற்றம் விக்ருதியால் பகவத் பக்தி ப்ரப்ருதியாய் இருக்குமாயிற்று என்று.

அரும்பதம்: வல்மிக்க சீயமாமன இராமானுசனேடொப்பார் பரவாதி மத்த கஜங்கள் மேல்கொண்ட சீற்றத்

தோடேயிருக்கச் செய்தேயும் பகவத் பக்தி குறைவற்றிருப்பர் என்று ஸ்வா பதேசம் என்று.

ஆக இவைகளால் மங்கை மன்னர் ஸ்ரீ ஸந்நிதியைப் பற்றிப் பாடினுர் என்பது புலனுகிறது. இதைச் சற்று விவரிப்போம். இராமானுசனே டொப்பார் என்பதால் ஆச்ரமத் தாலும் ஜ்ஞானத்தாலும் ஸமமான வர் என்று ஏற்படுகிறது. சிங்கங்கள் என்பதால் அழகிய சிங்கர்கள். அவை கள் கொம்பு கொண்டு பக்தி செலுத்துமிடம் சிங்கவேழ் குன்றத் தெம்பெருமானிடம். இவர்கள் ப்ர பத்தி பண்ணுமிடம் மாலோலனிடம். மஸ்தகத்தின் கொம்பு மூர்த்தந்ய நாடியினுல் உத்க்ரமணம் ஜீவரத்னங் களுக்கு, பைங்கண் என்று யானையின் கண்ணுக்கு விசேஷமிட்டால் ஸ்ரீ ஸந்நிதியில் ஜ்ஞானசக்ஷுஸ்ஸுக் களுக்கு (ஜ்ஞானவான்களுக்கு) உக்தி நிஷ்டை நடப்பது த்யோதிதமாகின் றது. சிங்கங்களின் குணம் (சீற்றம்) விக்ருதியாய் இருப்பதும் நன்கு ப்ர காசிக்கிறது. ஸ்வரூபத்தாலும் ஸ்வ பாவத்தாலும் அவிகாரனுன மலோல னின் அவதாரமான நம் ஸ்ரீ அழகிய சிங்கர்களுக்கு விகாரம் என்பதே இல்லாததால் 'ஸதிதர்மிணி தர்மா: சிந்த்யந்தே' 'என்கிற ந்யாயத்தால் பக்தியே ப்ரகாசிக்கின்றது. ஆக இவ்விதமான ஸ்வாபதேசங்களை யுடைய பிற்பகுதியில் ஸ்ரீமதழகிய சிங்கர்களால் ஆராதிக்கப்பட்டு வரும் ஸ்ரீ மாலோலனை மங்கையர்கோன் மங்களாசாஸனம் பண்ணினுர் என் பது நன்கு விளங்குகின்றது.

மேலர்த்தப்படிக்கும் நம்முடை நம் பெருமான் ஸேவை ஸாதிக்க வேண்டும் எனத்திருவுள்ளம் பற்றியே 43-வது பட்டம் ஸ்ரீ அழகியசிங்கர் மாலோல னின் திருவடிகளில் யானைக்கொம்பு களை ஸமர்ப்பித்து வந்தார் என்பதும் ஸர்வலோக விதிதம்.

கலியனுரை குடிகொண்ட கருத் துடையோனுன கவிதார்க்கிகசிங்கன் கலியனின் 'அங்கண்ஞாலமஞ்ச' என் னும் சிங்கவேழ் குன்றத்தான் மங் களாசனப் பாட்டின் 'உட்'கருத்தை ஆராய்ந்தார். தேசிகருக்கு பாலி ஸாக்ஷாத்காரமுண்டாயிற்று. அதிலும் ஸ்ரீ அஹோபிலமடம் ஸந்நிதி தோன்றிற்று. தாம் கண்டதை யும் சிஷ்யர்களுக்கு உபதேசம் செய் தருளுகின்றுர். 'ஜகதி பவிதாஸதவார் கச்ரித் ஜிஹாவரஸித ஸம்ஸ்ருதி:' என்று தமக்கு அடுத்தபடியாக இந்த ஜகத்தில் ஒருவர் பகவந்நியமனத் தால் ப்ரஹ்மசர்ய ஆச்ரமத்தி லிருந்தே ஸந்யாஸாச்ரமத்தை ஸ்வீரி கரித்துக் கொள்ளுமவர் ஒருவர் அவ தரிக்கப் போகின்றுர்' என்று கலி யனின் உட்கருத்தை விளக்கிக் கூறினுர்.

இவ்விதம் மஹான்களால் மங்களா சாஸனம் பண்ணப்பட்ட ஸ்ரீ அஹோ பில மடத்தில் 44-வது பட்டத்தில் மூர்த்தாபிஷிக்தராய் எழுந்தருளி யிருக்கும் ஸ்ரீ அழகிய சிங்கர் அத்யு தாரராய் ப்ரகாசிக்கின்றுர். குன்று மேலிட்ட தீபம் தூர தேசத்திலுள்ள வர்கள் ஸமீபத்திலுள்ளவர்கள் அதா வது: குறிப்பிட்டவர்களுக்கு மாத்திர மன்றிக்கே எல்லோருக்கும் எவ்விதம் உபயோகமாகுமோ அவ்விதமே தம் முடைய ஔதார்யம் எல்லோருக்கும் பயன்பட வேண்டுமென்றே சிங்க வேள் குன்றத்தில் ஸ்ரீமாலோல வித் வர் ஸதஸ்ஸை வைத்துக் கொண் டார் போலும். ஸ்ரீ அழகிய சிங்கரின் திருவுள்ளத்திற்குச் சேர 43-வது பட்டம் ஸ்ரீ அழகிய சிங்கரின் ஷஷ்ட் யப்தபூர்த்திமஹோத்ஸவம். திருமலை யில் விமான ஸம்ப்ரோக்ஷண ஸ்ரீ மாலோல வித்வத் ஸதஸின் 25-வது வருஷ தஹோத்ஸவம் என்றிவ்வாறு பல மஹோத்ஸவங்கள் மிகமிக விசேஷமாக நடைபெற்று வருகின் றன. இவைகளிலும் மிக்க உயர்ந்த தாய் ஸ்ரீ ஆதிவண் சடகோப யதீந்த்ர மஹா தேசிகன் காலம்முதல் இல் லாததான உயர்ந்த ராஜகோபுரத்தை கீழ் அஹோபிலத்தில் நிர்மாணம் செய்து வைத்து தம்முடைய கீர்த்தி யையும் கோபுரத்தளவு உயர்த்திக் கொண்டார். இவ்விதம் ஆசந்த்ரார்க் கம் அழிவில்லாத அரிய பெரிய அறங் களைச் செய்துவரும் ஆரண நூல் தேசிகயதீந்த்ரர் பல்லாண்டுகள் பாங் காய் எழுந்தருளியிருக்க ஸ்ரீ மாலோ லன் அருள்புரிய வேணுமாய் ப்ரார்த் திக்கின்றோம்.



---

30-ம் பக்கத் தொடர்ச்சி)

பஞ்சிலிருந்து மோதிரங்கள் தயாரித்து மஞ்சளில் நனைப்பார்கள். கல்யாண மான பெண்கள் குறைந்தது நான்கு; கல்யாணமாகாத பெண்கள் இரண்டு வீதம் மோதிரங்கள் தயாரிப்பார்கள். ஒரு சகோதரனுக்கு இரண்டு வீதம் இம்மோதிரங்கள் தயாரிப்பார்கள். இப்படித் தயாரித்து முடித்ததும் அப் பண்டிகை ஏன் ஏற்பட்டது என்பதற் கான வரலாற்றுக்கதை ஒன்றை பெண்களில் ஒருத்தி சொல்லுவாள்.

அக்கதை சொல்லி முடிந்ததும் 'கௌர்' உருவத்தை அகற்றிவிட்டு அந்த இடத்தில் ஜலம் நிறைந்த ஒரு சொம்பு அல்லது டம்ளரை வைப் பார்கள். அந்தச் சொம்பைச் சுற்றி மஞ்சள் பூசி அதன் கழுத்தில் 'தங்க அட்டிகை' யொன்றை அணிவித் திருப்பார்கள். தாங்கள் தயாரித்தப் பஞ்சு மோதிரங்களைத் தங்கள் சுண்டு விரல்களில் அணிந்து கொண்டு பாடியபடியே அச்சொம்பு நீரில் தங் கள் மோதிரம் அணிந்த விரல்களை விட்டு ஆட்டுவார்கள். பாட்டு முடிந் ததும் விரல்களில் உள்ள மோதிரங் களை அகற்றி சாணத்தாலான கௌரின் தலையில் வைத்து மஞ்சளால் அந்த உருவின்மீது 'ஐந்திடங்களில் பொட்டு இடுவார்கள். இதன் பிறகு தங்கள் சகோதரர்கள் இருப்பிடத் திற்குச் சென்று திலகமிட்டு அவர் களை விருந்துக்களைத்து விழாக்கொண் டாடுவார்கள்.

இவ்விதம் 'தன தேரஸ்' கொண் டாட்டத்துடன் தொடங்கும் தீபா வளிப் பண்டிகை பையா தூஜுடன் முடிவடையும். நாம் கொண்டாடும் தீபாவளியோடு—வட நாட்டார் இவ் விதம் கொண்டாடும் தீபாவளியை ஒப்பிடுவோமேயானுல் அது முற்றி லும் மாறுபட்டதாகவே நமக்குத் தோன்றும். ஆனுல், முன் காலத்தில் தீபாவளியை வட நாட்டில் 'யக்ஷ-ராத்ரி' அதாவது 'அஸுரன் இரவு' என்றே கொண்டாடி இருக்கிறுர்கள்.

நரகாசுரன் வதத்தைக் கொண் டாடும் நம் தீபாவளியும், வட நாட்டு 'யக்ஷ - ராத்ரி'யும் ஒன்றேயாகும். ஆனுல், காலக்கிரமத்தில் வட நாட் டாரின் இந்த 'யக்ஷ-ராத்ரி' பலவித மாற்றங்களை அடைந்து விட்டிருக் கிறது; அவ்வளவுதான்!



ஸத்ய விரத க்ஷேத்திரம் என்றும் நகரேஷு காஞ்சி என்றும் புகழப்படும் காஞ்சி முக்தி தரும் ஏழு முக்கிய நகரங்களுள் ஒன்றாக விளங்குகிறது. இந்து மத தர்மத்தை நிலைநாட்டிய ஆதிசங்கர பகவத் பாதாள் ஷண்மத ஸ்தாபனம் செய்த புண்ணிய பூமி காஞ்சி.

'காசி முதலிய நன்னகரெல்லாம் கார்மேனி அருளாளர் கச்சி கொவ்வா' என்று வேதாந்தா தேசிகரால் பாடப்பெற்ற புராணப் பிரசித்தி பெற்ற திருத்தலம் காஞ்சி. பிரம்ம தேவனால் செய்யப்பட்ட அசுவமேத யாகத்தில், ஸ்ரீ வரதராஜப்பெருமான் திரு அவதாரம் செய்த பெருமையோடு, ஆழ்வார்கள் மங்களா சாஸனமும் பெற்ற வைஷ்ணவ தலம் காஞ்சி.

பெயர் கோதாராம்பா. இவ்விரு இல்லற தம்பதியர்களும் வைஷ்ணவ தர்ம வழிப்படி நித்திய நியமங்கள் தவறாமல் செய்து வந்தனர். எந்நேரமும் திருவேங்கடமுடையான் திருவடியை நினைத்தவண்ணமாகவே இருந்தனர்.

அநந்தசூரியின் நெற்றியிலே துலங்கும் திருமண்ணின் தூய்மை, இத்தம்பதிகளின் உள்ளத்தில் பிரதிபலித்தது. எம்பெருமானையும் எம்பெருமானாரையும் நெஞ்சிலே நிலையாகக் கொண்டு வாழ்ந்ததும், இத்தம்பதியர்க்கு மணமாகி வெகு நாட்களாகியும் புத்திரபாக்கியம் என்பது மட்டும் ஏற்படவே இல்லை. தம்பதியர்கள் துயரம் கொண்டனர். துன்பம் தீர்க்க பச்சைவண்ண மேனியானை பல்லாயிர பிரபந்த நாமத்தால்

அடைக்கலம் புகுந்தவர்களுக்கு பாரிஜாத மலர்போல் கருணையை வர்ஷிக்கும் கமலக்கண்ணன், ஆயர் குலக்கொழுந்து, ஸ்ரீவேங்கடாசலபதி வெண்ணை உண்ட கண்ணனின் கோலம் கொண்டான். கோதாரம்பா கனவிலே கனகமணிக்கட்டிபோல அதி பிரகாசமாகஎழுந்தருளினார். 'அம்மா! புத்திர பாக்கியம் இல்லை என்று வருந்தாதீர். ஸ்ரீ ராமாநுஜ சித்தாந்தத்தைத் தரணி எங்கும் தழைத்தோங்க செய்ய சர்வக்ஞன ரத்தினம் போல் பிரகாசிக்க போகும் மணியான புத்திரனைப் பெறும் நற்பாக்கியத்தை அளித்தோம்'' என்று திருவாய் மலர்ந்த திருவேங்கடமுடையான், தமது திருச்சந்நிதியிலே உள்ளதுபோன்ற நவரத்தின மணியை அநந்தசூரியிடம் கொடுத்தார்.

# குருமணியாக அவதரித்த திருமணி

இத்தகைய சிறப்பு மிக்க காஞ்சியில் இயற்கை வளமும், எழில் வளமும் இறைவளமும் ஒருங்கே அமையப் பெற்றிருந்தது. இத்தலத்தில், திருத்தண்கா என்னும் தெய்வபதி அமையப் பெற்றிருந்தது. அங்கே, மரகதவல்லித்தாயார் சமேதராய், தீபப்பிரகாசர் என்னும் திருநாமம் பூண்ட விளக்கொளி எம்பெருமான் திருச்சன்னிதிக்குப் பக்கத்தில் ஏற்ற முற தோற்றமளிக்கும் தூப்புல் அக்ரஹாரம். தூப்புல் என்றால் தூய்மையான புல் என்று பொருள். விசுவாமித்ர கோத்திரத்தில் பிறந்த ஆன்றோர்கள் தோன்றிய காரணம் பற்றி தூப்புல் என்று திருநாமம் வழங்கலாயிற்று என்பர். இத்தெய்வப்பதியில் அறம் வடுவா அந்தணர் குலத்தில் வாழ்ந்த புருஷோத்தமர்தான் அநந்தசூரி என்பவர். இவருடைய மனைவியின்

சேவித்தனர். இவர்கள் ஒரு முறை காஞ்சிப்பதியிலிருந்துபுறப்பட்டு, பற்பல வைஷ்ணவ தலங்களைத் தலையால் வணங்கி, வேங்கடமுடையான் எழுந்தருளியுள்ள திருப்பதி என்னும் பூலோக வைகுண்டத்தை வந்தணைந்தனர். சேஷாத்திரி மலைநாதனை, திருமகளுக்கும், நிலமகளுக்கும் நாயகனை தேவாதி தேவனை, வாசுதேவனை, வைகுண்டவாசனை, ஸ்ரீவத்ஸம் என்னும் மறுமைப்பெற்ற மதுசூதனனைத் தம்பதிகள் இருவரும் கண்குளிரக் கண்டு களித்தனர். அவன் தானை தலையால் சேவித்தனர். இரவும், பகலும் அவனது திருவுருவை இதயத்தால் பூஜித்துக் கொண்டே இருந்தனர்.

---

திரு. நாகர்கோயில் கிருஷ்ணன்,

சென்னை - 4.

---

அநந்தசூரி, பகவானின் வரப்பிரசாதமான மணியைக் கண்களிலே ஏற்றிக் கொண்டு, மனையாளிடம் கொடுத்தார். கோதாரம்பா, அம்மணியை பகவானைத் தியானித்தவாறு விழுங்கினார்கள்.

இவ்வண்ணம் ஓர் அற்புதமான கனவு கண்ட கோதாரம்பா, கனவு கலைந்து திடுக்கிட்டு எழுந்தாள். அதே சமயம் அவளது கணவனும் விழித்தெழுந்தார். அவரும் இதே போன்ற கனவைக் கண்டார்.

இருவரும் கனவைச் சொல்லி களிப்பு கொண்டனர். தங்களது பக்திக்கு இரங்கி சேவை சாதித்த ஸ்ரீநிவாஸனை வீழ்ந்து வீழ்ந்து சேவித்தனர். அதற்குப் பின்னர், தம்பதியர்களுக்கு உறக்கம் எப்படி வரும். பொழுது புலர்ந்தது. ஆலயத்து மங்கள இசையும், மனோகர சுப்ர பாதமும் ஒலிக்கத் தொடங்கியது.

கௌஸல்யையின் திருக்குமாரன் கண்மலர, தம்பதிகள் சுப்ரபாதம் சொல்லி திருச்சந்நிதிக்குச் சென்றனர். அங்கே ஒரே பரபரப்பு. அர்ச்சகர்கள் அதிசயித்து நிற்கின்றனர். நடந்த செய்தி கேட்டு ஜீயர் வியப்புறுகிறார். கோவில் மணியைக் காணவில்லை.

ஜீயர் சுவாமிகள் முகம் மலர, "அர்ச்சகர் யாரும் இதற்காக அச்சமுற வேண்டாம். நேற்று யாம் ஒரு விசித்திரமான கனாக் கண்டோம். அக்கனவிலே எம்பெருமான், இத்திரு மணியை ஒரு தம்பதியிடம் அளிக்கிறார். அவர்கள் அம்மணியை விழுங்குகிறார்கள்' என்றார். அக்கணமே அத்தம்பதியர்கள் அநந்தசூரி கோதாரம்பா என்பது அனைவர்க்கும் தெரிய வருகிறது!

அனந்தனின் அருளைப் பெற்ற அவ்வற்புத தம்பதியர்களைச் சேவித்தோர் பலபேர்! அவர்கள் பெருமையைப் பேசி மகிழ்ந்தோர் பலபேர்!

ஆனந்தக் கண்ணீரில் நனைந்து, அனந்தனின் திருமுன் மேனியில் இட்ட திருமண், பால்போல் வழிய நின்ற அநந்தசூரியும், மண் உண்டவன் கொடுத்த மணி உண்ணும் பேறு பெற்ற மணி வயிறு வாயிக்கப்பெற்ற மங்கை நல்லாள் கோதாரம்பாவும் திருச்சந்நிதிமுன் பக்தியின் வடிவமாக காணப்பட்டனர்.

அர்ச்சகர்கள் பிரசாதம் கொடுத்துத் தம்பதிகளை மகிழ்வித்தனர்.

இவ்வாறு திருவேங்கடநாதனின் திருவருளைப் பரிபூரணமாகப் பெற்ற ஞான தம்பதிகள் ஸ்ரீயப்பதியைவிட்டு புறப்பட்டு, காஞ்சியம்பதியை வந்தணைந்தனர்.

திங்கள் பல தாண்டின. தீபப் பிரகாசர் திருச்சந்நிதியில் விபவ வருஷம், புரட்டாசித் திங்கள், திருவேங்கடமுடையானின் தீர்த்தவாரி நந்நாளில் சிரவண நட்சத்திரத்தில் கோதாரம்பா மாதவம் செய்து கிடைத்த மணியான குழந்தையைப் பெற்றெடுத்தாள்.

திருவேங்கடநாதன் கருணையால் அவதரித்த மணியால் பெற்ற மாமணிக்கு, மணிவண்ணனுக்கு வேங்கடநாதன் என்ற நாமத்தைச் சூட்டினர் பெற்றோர்.

வேங்கடநாதனும் தளிர் நடை பயின்று சிறு தேர் உருட்டி மழலைப் பருவம் போன்ற பல பருவங்களைக் களிப்போடு கடந்தவாறு ஐந்து வயதுப் பிராயத்தைப் பெற்றான்.

சுபயோக சுபமுகூர்த்தத்தில் வேங்கடநாதனுக்கு அக்ஷராப்யாசம் நடந்தது. ஹயக்ரீவ மந்திரத்தால் ஓர் இரவில் ஓராயிரம் கவிதை பாடப் போகும் மணிவண்ணனுக்கு வித்தைகள் அனைத்தும் சுலபமாக பதிந்தன.

அவ்வூரில் ஒரு முறை, தேவாதிராஜன் சந்நிதியில் ஸ்ரீ நடாதூர் அம்மாள் கதாகாலக்ஷேபம் நடந்து கொண்டிருந்தது. பக்த கோடிகள் செவி இன்பத்தைப்பெற்று பேரின்பச் சுகம் கண்டனர்.

வேங்கடநாதனுக்கு காலக்ஷேபம் கேட்கப் போகவேண்டும் என்ற அவா எழுந்தது.

அக்கணமே, கிங்கிணி அசைந்தாட திருச்செவிகளில் வைரக் கடுக்கண் அழகு செய்ய, பட்டுப் பீதாம்பரம் அரையிலே தவழ அலங்கரிக்கப்பட்டான் வேங்கடநாதன். அவனுக்குத் துணையாக அவனது அம்மான் அப்புள்ளாரும் புறப்பட்டார்.

மூவடி கேட்கப் புறப்பட்ட வாமனனைப்போல் சின்னஞ்சிறு சேவடி பதித்துச் சிங்காரமாகப் புறப்பட்ட வேங்கடநாதனைக் கண்டு களித்தோர் திருவீதியிலே எத்தனை எத்தனையோ பேர்!

கோடி புண்ணியம் தரும் கோபுரத்தைக் கண்டு களித்து உள்ளே சென்றார் வேங்கடநாதன். பெருமாளை சேவித்து, பகவத் பாதாளை நமஸ்கரித்து கதாகாலக்ஷேபத்தைக் கேட்க உட்கார்ந்தார் வேங்கடநாதன்.

அன்று ஆயர்பாடியில் யசோதைக்குப் பயந்து உட்கார்ந்திருக்கும் கண்ணனைப்போல, பக்த கோடிகளுக்குப் பக்திகாட்டி, பளிங்குச் சிலை போல் உட்கார்ந்திருந்தார் வேங்கடநாதன். வேங்கடநாதன் உள்ளே நுழைந்ததைப் பார்த்தபோதே, காலக்ஷேபம் செய்து கொண்டிருந்த அம்மாளின் விழிகள் வியந்தன. வார்த்தைகள் நின்றன. பாலகனின் மீது வைத்த பார்வை சற்றும் விலகாமல் அப்படியே பார்த்துக் கொண்டிருந்தாள். பக்த கோடிகளின் பார்வையும் பாலகனின் பக்கம் திரும்பின. அவர்களும் அவனது எழில் கொஞ்சும் மோகன முகத்தைப் பார்த்து அப்படியே சிலையாக அமர்ந்தனர். சற்று நேரத்தில், நடாதூர் அம்மாள் காலக்ஷேபத்தைத் தொடங்கினார். அம்மாளுக்கு காலக்ஷேபத்தை எந்த இடத்தில் நிறுத்தினோம் என்பது ஞாபகத்துக்கு வரவில்லை. சபையில் உள்ளோர்க்கும் நினைவிற்கு வரவில்லை.

கண்ணனின் பேரழகில் மெய் மறந்து நின்ற கோபியர்களைப்போல, அனைவரும் வேங்கடநாதன் ரூப லாவண்யத்தில் மதிமயங்கி நின்றதால், அவர்களுக்கு வேறு எந்த சிந்தையும் தோன்றவில்லை.

இத்தருணத்தில், வேங்கடநாதன், அம்மாள் எந்த இடத்திலிருந்து, உபந்நியாசத்தைத் தொடர வேண்டும் என்பதைக் கூறினான். பாலகனின் புத்தி கூர்மையைக் கண்டு அனைவரும் அதிசயித்தனர். நடாதூர் அம்மாள் குழந்தையை வாரி அணைத்து உச்சிமோந்து உள்ளம் குளிர்ந்தாள். முத்தமாரி பொழிந்தார், "குழந்தாய்! நீ எம்பெருமா

னின் அருளைப் பரிபூரணமாகப்பெற்று விட்டாய்! தர்மம் தழைக்க வந்த வேதாந்தத்தின் மெய்ப்பொருளை உலகோர்க்கு உணர்த்துவாய்! சர்வ மங்களாநு பவந்து" ஆசீர்வாதம் செய்தாள் அம்மாள்.

இவ்வாறு அனைவராலும் கொண்டாடப்பட்ட குழந்தை வேங்கடநாதனுக்கு ஏழாவது பிராயத்தில் உபநயனம் செய்தனர் பெற்றோர்கள்.

அப்புள்ளார் தமது மருமகனுக்கு வேதங்களையும், வேதாந்தங்களையும் சகல சாஸ்திரங்களையும் கற்றுக் கொடுத்தார். வேங்கடநாதன் சகல சாஸ்திரங்களையும் கற்றுத் தேர்ந்து மாபெரும் வேதாந்தியாக விளங்கினான்.

தக்க பிராயத்தில் பெற்றோர்கள் திருமங்கை என்னும் மங்கை நல்லாளை மணம் செய்து வைத்தனர்.

வேங்கடநாதன் இல்லறத்தை இனிது நடத்தி வந்ததோடு, ஈடு இணையற்ற பக்தியையும் பெருக்கி வந்தார்.

வேங்கடநாதனுக்கு, அவரது அம்மாள் அப்புள்ளார் கருட மந்திரத்தை உபதேசித்ததோடு ஸ்ரீ ராமாநுஜனின் பாதுகைகளையும் அளித்து அனுக்ரஹித்தார்.

வேங்கடநாதன் பாதுகைகளைப் பக்தி சிரத்தையுடன் பூஜித்துவரலானார்.

சுவாமிக்கு ஸ்ரீ காஞ்சி வரதராஜ பெருமாளிடமும் ஸ்ரீ பெருந்தேவித் தாயாரிடமும் அளவுகடந்த ஈடுபாடு உண்டு. காரணம், அவதார ஸ்தல அபிமான விசேஷம் போலும். ஸ்ரீ வரதராஜ பஞ்சாசத் என்று ஐம்பது ஸ்லோகங்களையும் "மெய்விரத மான்மியம்" என்றும் மற்றும் அநேக பாசுரங்களையும் அருளிச் செய்தார். ஒரு ஏழை பிரம்மசாரியின் கல்யாணத்திற்காக ஸ்ரீ பெருந்தேவி தாயாரை பிரார்த்தித்து, ஸ்ரீ ஸ்துதி அருளிச் செய்த மாத்திரத்தில் கனகதாரை ஏற்பட்டது. வைகுண்ட வாசம் தனக்குத் தேவை இல்லை என்றும் ஸ்ரீ வரதன் சேவைதான் தேவை என்றும் சத்யமாகச் சொன்னவர். காஞ்சி ஸ்ரீ வரதன் சன்னிதியில் புரட்டாசி, ஸ்ரவண உத்சவத்தை சேவித்தால் இவருடைய மகிமையை உணரலாம். வித்யாரண்யர் என்ற கவி இவரை ராஜ அரண்மனையில் பண்டிதராக வருமாறு அழைப்பு விடுத்தார். ஆனால் சுவாமியோ தம்முடைய பிதாமஹன் பிரம்மாவால் ஏற்படுத்தப்பட்ட சொத்தாகிய ஸ்ரீ வரதன் இருக்கையில், வேறு சொத்து தேவையில்லை என்று நிராகரித்தார். பிக்ஷை அரிசியில் பொன் கலந்து கொடுத்தும், அவைகளை எடுத்துக் கொள்ளவில்லை சுவாமிகள். இதிலிருந்து ஞான வைராக்கியத்தை பூஷணமாக கொண்டவர் சுவாமிகள் என்பது தெளிவாகிறதல்லவா? ஸ்ரீ ரங்கநாதன் இவரது பக்திக்கு இதயகமலம் மலர்ந்து சங்கு சக்ர கதாபாணியாக இவர் முன் எழுந்தருளி, "வேதாந்தாசாரியார்" என்று திருவாய் மலர்ந்தருள, ஸ்ரீ ரெங்கநாச்சியார் "ஸர்வதந்த்ர ஸ்வதந்த்ரர்" என்று அனுக்ரஹித்தார்கள். தாயாரால் விருது பெற்ற வேங்கடநாதன் வேதாந்ததேசிகரானார். திருவஹீந்திரபுரத்து எம்பெருமானை மங்களாசாஸனம் செய்து பேரின்பம் பூண்டார்.

வேதாந்ததேசிகன் பூவுலகில் வியக்கத்தக்கப்பற்பல அற்புதங்களைச் செய்தார். அகந்தையால் எதிர்த்து வந்த பண்டிதர்கள் பலரை வாதில் வென்றார்.

ஒரு முறை சுவாமிகள் மீது பொறாமை பூண்ட சில வஞ்சகர்கள் அவரது இல்லத்து வாசலில் பாதரக்ஷைகளைத் தோரணமாக்கட்டித் தொங்க விட்டனர்.

அவற்றைப் பார்த்தும் சுவாமிகள் சற்றும் கோபம் கொள்ளவில்லை. முகம் மலர வஞ்சகர்கள் வெட்கித் தலைகுனியும் வண்ணம், "சிலர் கர்மாவை பற்றுகிறார்கள். சிலர் ஞானத்தை பற்றியிருக்கிறார்கள். அடியேன் பாகவதர்களுடைய பாதரட்சைகளைப் பற்றும் பேறு பெற்றிருக்கிறேன்" என்று கூறினார்.

இவ்வாறு அன்பினாலும், பக்தியினாலும், விவேகத்தினாலும் விரோதிகளை வென்றார். பொறாமைக்காரர்களும், ஆட்சிக்காரர்களும் செய்த சதி திட்டங்களைத் தூள் தூளாக்கினார்.

ஸ்ரீ ரெங்கநாதர் திருசந்நிதி முன்னால் அமர்ந்து, இரவோடு இரவாக ஸஹஸ்ரம் என்று எம்பெருமானின் பாதுகையைப்பற்றி ஆயிரம் சுலோகங்களை மிக அற்புதமாக இயற்றினார். "கவிதார்க்கிகஸிம்ஹம்" என்ற விருதையும் பெற்றார்.

இவ்வாறு அளவற்ற பெருமைகளைப் பெற்ற வேதாந்ததேசிகன், வைஷ்ணவ ஆசார்யர்களின் அடிப் போற்றி வேதாந்த பிராச்சாரம் செய்து வரலானார்.



(16-ம் பக்கத் தொடர்ச்சி)

வெடுக்கப்பட்ட மணாளனை வேண்டிய வரை மனத்தில் நிலைநிறுத்திய காரணத்தால் பின் மணம் புரிந்து கொள்ளாது தூய நற்துறவு பூண்டு ஒழுகினர். பெற்றோர் மறைந்தாலும் தம்பியைப் பேணி வளர்க்கத் தன் உயிரைக் காத்து வந்தார்.

மருள் நீக்கியார் சமண மதத்தைப் பின்பற்றி தருமசேனராகப் பெயர் பெற்றதை அறிந்து தமக்கையார் திலகவதியார் திருவதிகை வீரட்டானத்துத் திருக்கோயிலில் தொண்டு செய்து தம்பியை மீண்டும் சைவ நன்னெறிக்கு மாற்றும்படி இறைவனை அனுதினமும் வேண்டி வந்தார். இவரது தூய அன்பிற்கு ஆட்பட்ட இறைவன் தருமசேனருக்குச் சூலை நோய் தந்தார். சமணர்கள் மருத்துவம் பலிக்காமல், கொடிய நோயின் தீர்வுக்கு தன் தமக்கையாம் திலகவதி அம்மையிடம் வந்தடிபணிந்தார்.

திலகவதியார் என்னும் கருணை வடிவு தந்த திருநீற்றால் சூலை நோய் நீங்கப்பெற்று சைவ நன்னெறி மேற்கொண்டு திருநாவுக்கரசர் என்ற திரு நாமம் பெற்றார். இவ்வளவிற்கும், தேவாரம் பாடியதற்கும் திலகவதியார் என்னும் அத்தாயின் தனிக் கருணையாம் அன்பிற்கு ஆட்பட்ட இறைவன் திருவருள்தானே.

பாண்டிய நாடு சமணர்களின் உறைவிடமாக மன்னன் முதல் மக்கள் அனைவரும் வதிந்தபோதும் பாண்டி மாதேவி மங்கையர்கரசியார் சைவ நெறியில் நின்றொழுகி, திருஞான சம்பந்தரை அழைப்பித்து சமணருடன் வாதிடச் செய்து பாண்டிய நாட்டில் மீண்டும் சைவ நெறி பரவத் துணைநின்ற மங்கையற்கரசி கொண்ட தூய நெறியால் கணவனையும் மன மாற்றம் கொளச்செய்து நாட்டிலும் நன்னெறி பரவச்செய்ய முடிந்தது என்பதை எண்ணும்போது தாயின் தனிக்கருணையால் தக்க செயல் சீர்பெறுமே.

பெண்கள் இறையருள் பெற ஏற்கும் விரதம் எப்படி இருக்க வேண்டும் என ஆண்டாள் அருளிய திருப்பாவை திறம்படச் செப்பும். எளிதாகக் கிடைப்பனவும், அன்றாடம் பயன் கொள்ளுவனவற்றை நீக்கி, இறையருள் பெற தியானிப்பதே விரதம் என விளக்குவதை நன்கு உற்றாய்ந்தால் உணரலாகும்.

"வையத்து வாழ்வீர்காள் நாமும்
நம் பாவைக்கு செய்யும்
கிரிசைகள் கேளீரோ; பாற்கடலுள்
பையத் துயின்ற பரமன் அடிபாடி
நெய்யுண்ணோம் பாலுண்ணோம்
நாட்காலே நீராடி
மையிட் டெழுதோம் மலரிட்டு நாம்
முடியோம்.
செய்யாதன செய்யோம் தீக்குறளைச்
சென்றோதோம்
ஐய்யமும் பிச்சையும் ஆந்தனையும்
கைகாட்டி
உய்யுமா றெண்ணி உகந்தேலோ
ரெம்பாவாய்.........',

எளிதாகக் கிடைக்கும் பொருள்களை இறைனுக்காக்கிவிடும்போது, தாம் அதைத் துறப்பது தூய விரதமாகும் அதன் நோக்கில் பால், நெய் போன்றவைத் துறந்து நிற்றல்—தூய நீராடியதும்,அழகூட்டும் கவர்ச்சிப் பொருள்களான கண்ணுக்கு மையிடல், தலையில் பூச்சூடல் நீக்கி இறைவனைத் தொழுகின்ற முறை சிறப்பாகும் என்பதோடு, செய்யக்கூடாத செயல்கள் செய்யாது தீச்சொற்கள் பேசாது இருக்க வேண்டுமாயின் இறைவன் திருநாமம் உச்சரிப்பதே எப்போதும் கொள்ளல் சிறந்த அறமுடை விரதம் எனக்கூறியதோடு, தன்னைவிட உயர்ந்தோராகிய அடியார்கள், திருக்கோயில் தொண்டர்கட்கு உவந்து அவர்கட்குக் கொடுப்பதான "ஐயம்" மற்றும் இரப்போர்க்கு இல்லை என்னாது தருவதானது "பிச்சை". இரண்டையும் முறையாகச் செய்தல் பெண்கள் கொள்ளும் தூய விரதம் என்று தெளிவாக்கியிருக்கும்போது தாய்மையின் தூய அன்பின் பிரவாகம் பக்தியில் நிறைந்து பயன் தருவதாகும் என்பதில் ஐயமேது? விரதம் முடித்ததும் இறைவனையே அன்பினால் அகத்துள் அமைத்துவிடுதலையும் அழகிய பாடலால் அற்புதமாக விளக்கிவிடுகிறார் கோதை.

':கூடாரை வெல்லும் கோவிந்தா உன்
தன்னைப்
பாடிப் பறைகொண்டு யாம்பெறும்
சன்மானம்
நாடும் புகழும் பரிசினால் நன்றாகச்
சூடகமே, தோள்வளையே தோடே
செவிப்பூவே
பாடகமே என்றனைய பல்கலனும்
யாமணியோம்
ஆடை யுடுப்போம் அதன் பின்னே
பாற்சோறு
மூட நெய்பெய்து முழங்கை வழி
வாரக்
கூடியிருந்து குளிர்ந்தேலோ
ரெம்பாவாய் "

தன்னைக் கூடாதவரை வெற்றி கொள்பவன் கோவிந்தன். கூடியவருக்குத் தொண்டு செய்யும் தூயவன் கண்ணன். எனவே கூடாரை வெல்லும் கோவிந்தா என்றார் ஆண்டாள். நாடே புகழ்ந் தேத்தும்படியாகக் கண்ணனிடமிருந்து ஒவ்வொன்றாக கூறிப்பெற்று பின் அவனையே அன்பெனும் இதயத் தாமரையில் வீற்றிருக்கச் செய்து, கூடியிருந்து பக்தியின் சக்தியை பகிர்ந்து கொள்ளும் சமத்துவ நிலையால் மகிழ்வு பொங்கச் செய்ய வேண்டியது தாயின் தனித் தன்மை என்றுதெளிவுபடுத்தியதைக் காணும்போது ஒரு கருணை மிக்க தாயால்தானே இச்செயல் செயலாக்க முடியும் என எண்ணி இறும்பூதெய்த முடிகின்றது.

ஆதிசங்கரரும் அன்னையை சாரதா தேவி என்றும், காமாட்சி என்றும், சக்திபீடம் அமைத்து வழிபட்டு, அன்னையின் கருணை அனைவரும் பெற அழைத்தார். கனகதாராதோத்திரம் பாடி பொன் மழையே பொழியச் செய்தார் என்றால் அன்னையின் அருள்தானே அற்புதம் நிகழச்செய்து அகிலம் போற்ற வைத்தது.

அன்னை வழிபாட்டிற்கு அமைத்தனர் பத்துநாள் நல்விழா. முப்பெரும் தேவியர்க்கு மும்மூன்று நாட்கள் விழா. தப்பாமல் முச்சக்தியும் எப்போதும் பெற பத்தாம் நாள் தத்துவத்தின் திருவிழா என ஆன்றோர் அமைத்து அன்னையின் அருள் பெற வழி வகுத்தனர்.

நிலமும் தாய், நீரும் தாய், காரும் தாய், கல்வியும் தாய், ஒளியும் தாய், பொன் பொருள் செல்வமும் தாய், வீரமும் தாய், விவேகமும் தாய் அஷ்டலட்சுமியும் தாய் என தெய்வவடிவத்தைப்போற்றிப்பணிவதோடு இல்லத்தில் தெய்வத்தாயினை இருத்தும் மானிட உருவான தாய் தனை நன் முறையில் பேணிக் காத்து, தாரமாக வந்து பின்னே தாயாகத் தொண்டு செய்யும் இல்லத்தாய் தனக்குஅருந்தொண்டாற்ற வேண்டியது ஆண்மைக்குச் சிறப்பாகும்.



# கீதை காட்டும் நல்வழி

**மோக்ஷ ஸன்யாஸ யோகம்**

அத்தியாயம் — 18

பகுதி — 26

கீதைப் பிரச்சாரம் செய்கிறவன் அடையும் நன்மை கீழ்க்காணும் சுலோகத்தில் தெரிவிக்கப்படுகிறது.

ய இதம் பரமம் குஹ்யம்
மத்பக்தேஷ் வபிதாஸ்யதி |
பக்திம் மயி பராம் க்ருத்வா
மாமே வைஷ்யத் யசம்சய: ||(18-68)

'மிகவும் ஆழ்ந்த இத்தத்துவத்தை என் பக்தர்களிடம் உபதேசித்து என்னிடத்து மேலாம் பக்தி பண்ணுகிறவன் ஐயமின்றி என்னையே அடைவான்.'

கீதையை நன்கு கற்றுத் தேர்ந்து தெரிந்து பிறருக்கு அதை எடுத்துக் கூறுவது சிறந்த செயலாகிறது. அது சீரிய யக்ஞமாகிறது. பிறருக்கு நாம் எதை எடுத்து வழங்குகிறோமோ அது நமக்கே சொந்தமாகிறது. உதாரணமாக கல்வியை நாம் கற்கும் வேளையைவிட பிறருக்கு எடுத்து விளக்கிக் கூறுகையில், நாம் அதிகத் தெளிவு அடைகிறோம். 'கொடுங்கள் கொடுங்கள். அதுவே அதிகம் பெறுவதற்கான ரகசியமாகும்' என்று இமய ஜோதி ஸ்ரீ சுவாமி சிவானந்தர் அடிக்கடிக்கூறுவார். அவர் அவ்விதம் வாழ்ந்து காட்டிய பெருமகனுவார். உணவைத் தானே உண்டு மகிழ்வதைவிட, பிறருக்குக் கொடுத்து அதன்பின் தான் புசிப்பதில் உள்ள இன்பம் பன்மடங்காகும்.

இன்றைய சமுதாயத்திற்குக் கண்ணன் காட்டிய வழி அதிகமதிகம் தேவைப்படுகிறது. எங்கு நோக்கினும் அமைதியின்மை, ஆர்ப்பாட்டம், வன்முறை, கொலை, கொள்ளை, லஞ்சம், ஊழல், நேர்மையின்மை, நியாயமின்மை நிலவும் இன்றைய சூழ்நிலையில் தனிமனிதனுக்கும் அவன்மூலம் சமுதாயத்திற்கும் அமைதியையும், ஆனந்தத்தையும் அடைய வழிகாட்டும் கீதையின் போதனைகள் மென்மேலும் தேவைப்படுகின்றன.

இயந்திரமயமான இன்றைய வாழ்க்கையில் பரபரப்பும், படபடப்பும் மிக்க இன்றையச் சூழலில், அவநம்பிக்கையும் அவமதிப்பும் அதிகம் காணப்படும் இன்றைய சமுதாயத்தில் மன அமைதியைப் பெறும் உன்னதமான மார்க்கத்தை கீதை காட்டுகிறது. புறவசதிகள் மற்றும் போகத்தின் பிடியில் சிக்கி விஞ்ஞானக் கண்டுபிடிப்புகளுக்கடிமையாகி மன அமைதியை இழந்து தவிக்கும் நம்மவருக்கு மன அமைதியைப் பெறும் மார்க்கத்தை பகவான் காட்டுகிறார் அதை நன்கு புரிந்து கொண்டு பிறருக்குப் புரிய வைப்பது சீரிய பணியாகிறது. கீதைப் பிரச்சாரம் மென்மேலும் தீவிரமாக்கப்படல் வேண்டும். கீதைப் பிரச்சார அமைப்புகள் ஆங்காங்கு ஏற்படுத்தப்பட வேண்டும். கீதைப் பாராயணக் குழுக்கள் கிராமம் மற்றும் நகரங்களில் அமைக்கப்பட வேண்டும். கீதையிடம் பக்தி கொண்டு பணிவுடன் அதை மக்களிடையே பிரச்சாரம் செய்பவன் இறுதியில் பகவானையே அடைவான் என்று கண்ணன் இந்த சுலோகத்தில் கூறுகிறார்.

மக்களிடையே நல்ல கருத்துக்களைப் பரப்பும் சான்றோனைப் பகவான் எங்ஙனம் கருதுகிறார் என்பது அடுத்து சுலோகத்தில் பகரப்படுகிறது.

ந ச தஸ்மான் மனுஷ்யேஷு
கஸ்சின்மே ப்ரியக்ருத்தம: |
பவிதா ந ச மே தஸ்மா
தன்ய:ப்ரியதரோ புவி || (18-69)

'மனிதருள் எனக்கு விருப்பமான செயல்புரிபவன் அவனைவிட வேறு எவருமில்லை. எனக்குப் பிரியமானவனும் அவனைவிட யாருமில்லை.'

கீழான வாழ்க்கை மேலானதாக ஆக வேண்டும். புல்லிய வாழ்க்கை புண்ணிய மயமானதாக ஆக வேண்டும். விலங்கு நிலையில் உள்ள வாழ்க்கை தெய்வீக மயமாக மாற வேண்டும். உப்புச்சப்பற்ற வாழ்க்கை உயர்ந்த லட்சியங்கள் நிறைந்ததாக ஆக வேண்டும். இதற்கான வழியைத்தான் பகவத்கீதை காட்டுகிறது. கீதை காட்டும் பாதை மனிதராய்ப் பிறந்த அனைவருக்கும் பொதுவானது. நம்மனைவரையும் ஆட்டிப்படைப்பது நம் மனம்தானே! இந்த மனத்தில் உள்ள மாசுகளை அகற்றி எங்ஙனம் சாதாரண மனிதன் தெய்வ நிலையை அடைய முடியும் என்பதற்கான மார்க்கத்தை கீதை காட்டுகிறது. எனவே இந்த மேலான செய்தியை மக்கள் மத்தியில் பரப்புவது சீரிய செயலாகிறது. அத்தகைய நற்காரியத்தைச் செய்யும் சான்றோன் பகவானுக்கு மிகவும் பிரியமானவன் ஆகின்றான்.

**பேராசிரியர் டி. கே. நாராயணன்**
M.Sc., M.Phil.
**ஆசிரியர், 'சமயஜோதி' மதுரை.**

இயற்கையே இறைவன். இயற்கையைப் பற்றிய விளக்கம் கீதையில் இடம் பெறுகிறது. இயற்கையை

## சயன கோலத்தில் ஒரு சஞ்சீவிராயன்!

இராம-ராவண யுத்த சமயம். இராம லட்சுமணர்கள் மயில் இராவணனின் மாயாஜால வித்தையால் கட்டுண்டு சிறிது நேரம் செய லற்று மயங்கிக் கிடந்தனர். மயில் இராவணன் அப்போது அவர்களைத் தூக்கிச் சென்று பிரயாகை நதிக்கரையில் பக்குவமாய் ஒளித்து வைத்து விட்டான். அனுமன் அதை அறிந்தான். மறுகணம் அவன் மயில் இராவணன்மீது பாய்ந்து கதா யுதத்தால் கதிகலங்க அடித்தான். மயில் இராவணன் கதை முடிந்தது. உடனே இராமலட்சுமணர்களைத் தேடிக் கண்டுபிடித்து தன் தோள்களில் தாங்கி வந்து வெளியில் மீட்டான். சிறிது ஓய்வு கொள்ள எண்ணி அங்கேயே உடலைச் சாய்த்தான். அதன் காரணமாக சிந்தூரம் பூசிய சிவந்த மேனியுடனும் ஒரு கையில் இராம-லட்சுமணர்களையும் ஒரு கையில் கதாயுதத்தையும் கொண்டு விளங்கும் அனுமனை பள்ளி கொண்ட கோலத்தில் பிரயாகை நதிக்கரையில் கண்டு இன்றும் நாம் பரவசம் கொள்ள முடிகிறது.

ஆர். சுப்பராவ்-திருக்கோவலூர்.

நாம் எப்படிப் பொருள்படுத்த வேண்டும். இயற்கையில் இறைவனை எப்படி நாம் காண வேண்டும் என்பதை மிகத் தெளிவாக கீதை எடுத்துக் கூறுகிறது. கீதையின்படி நாம் வாழ முனைவோமேயாகில் அந்த வினாடி முதல் நமது வாழ்வில் அமைதியும் மகிழ்ச்சியும் அதிகரிக்கத் தொடங்கும். கீதையின் அடிப்படையில் வாழ்தல் என்பது மனத் தூய்மையுடன் சுயநலமற்றுப்பிறர் நலம் நாடி வாழ்வது என்பதாகும்.

எனவே கீதையை நாம் கற்க வேண்டும். பொருள் உணர்ந்து கற்க வேண்டும். உள்ளதை உள்ளபடித் தெரிந்து கொள்ள வேண்டும். பின்னர் 'யாம் பெற்ற இன்பம் பெறுக இவ்வையகம்' என்ற அடிப்படையில் பிறருக்கும் கீதையின் உயர் கருத்துக்களை எடுத்துக் கூற வேண்டும். இதுவே பகவானுக்கு மிகவும் உகந்த செயல் என்று பகவானே இந்த சுலோகத்தில் கூறுகிறார்.

பிறருக்குக் கீதையைப் புகட்ட இயலாதவர்கள் என்ன செய்ய முடியும் என்பதற்கான பதில் அடுத்த சுலோகத்தில் வருகிறது.

**அத்யேஷ்யதே ச ய இமம் தர்ம்யம்**
**ஸம்வாத மாவயோ: |**
ஞானயக்ஞேன தேனுஹம்
**இஷ்டஸ்யாமிதி மே மதி: ||** (18-70)

'தர்மம் நிறைந்த நம்முடைய இந்த உரையாடலை யார் கற்றறிகின்றாரோ, அவனால் ஞானயக்ஞத்தால் நான் வணங்கப்படுபவன் ஆகிறேன். இது என் கொள்கை.'

கீதை முழுவதும் உயர்ந்த வாழ்க்கைத் தத்துவத்தைப் புகட்டுகிறது. வேத உபநிடத சாரத்தை எடுத்துக் கூறுகிறது. அது தர்ம சாஸ்திரம், முழுக்க முழுக்க அறநெறி அல்லது தெய்வ நெறியைப் பற்றியே அர்ஜுனனும் பகவானும் உரையாடினர். இத்தகைய மகிமை வாய்ந்த கீதா சாஸ்திரத்தை இல்லை-கீதா உபநிஷத்தை-யார் கற்று அறிகிறார்களோ அவர்கள் சிறந்த யக்ஞம் செய்தவர்களாக ஆகிறார்கள் என்று பகவான் கூறுகிறார்.

'யக்ஞம்' என்ற வார்த்தை பொருள் மிகப் பொதிந்தது. அது பல வகைப்படும். பிறர் நலம் கருதிச் செய்யப்படும் அனைத்துக் காரியங்களும் யக்ஞம் ஆகிறது. நரயக்ஞம், ப்ராணி (பூத) யக்ஞம், பித்ருயக்ஞம் என்று பல்வகை யக்ஞங்கள் மறை நூல்களில் பேசப்படுகின்றன. இவை தவிர ஜபயக்ஞம், திரவிய யக்ஞம் போன்றவையும் உள்ளன. விபூதி யோகத்தில் பகவான் 'யக்ஞானாம் ஜப யக்ஞோஸ்மி—(யக்ஞங்களில் நான் ஜப யக்ஞமாக இருக்கிறேன்) என்று கூறியிருக்கிறார். ஜப யக்ஞம் என்பது முழுமனதுடன் பகவானை ஜபித்தல் ஆகும். 'எண்ணிய எண்ணியாங்கு எய்துவர்' என்ற அடிப்படையில் நாம் பக்தி சிரத்தையுடன் இறைவனைக் குறித்த சிந்தனையில் ஆழ்ந்து விடுவோமேயானால் நாம் இறை மயமாக ஆகிவிடுவோம்.

ஜப யக்ஞத்தைப் போல 'ஞான யக்ஞமும் மகிமை வாய்ந்தது. நல் வாழ்வு வாழ வழிகாட்டும் கீதாமார்க்கத்தை மக்களிடையே எடுத்துக் கூறுதல் ஞானயக்ஞமாகிறது. இந்த ஒரு உயர்ந்த அடிப்படையில்தான் சுவாமி சின்மயானந்தர் போன்ற மகான்கள் இன்று உலகெங்கும் 'கீதா யக்ஞம்' மூலம் கீதைப் பிரச்சாரம் செய்து வருகிறார்கள்.

கீதையைப் பிரச்சாரம் செய்ய இயலாதவர்கள் தாங்களே கீதையை நன்கு கற்று அறிந்தால் அந்தப் புனிதச் செயலே ஞான யக்ஞமாகிறது என்று பகவான் கூறுகிறார். கீதையின் அடிப்படையில் நாம் நம் வாழ்வை அமைத்துக் கொண்டால் நாம் ஞான யக்ஞத்தில் பங்கு கொள்கிறோம் என்பதாகிறது. நமது அத்தகைய வாழ்வு பிறருக்குத் தூண்டு கோலாகவும்,வழி காட்டியாகவும் அமைகிறது.

கீதைப் பிரச்சாரம் செய்வது மேலானது அது இயலாதவர்கள் தாங்களே கீதையைக் கற்றுணர்ந்து ஞானயக்ஞத்தில் ஈடுபடலாம் என்று கூறிய பகவான் அடுத்த சுலோகத்தில் தனக்குத் தானே கீதையைக் கற்றுக் கொள்ள இயலாதவர்கள் என்ன செய்வது என்பது பற்றிக் கூறுகிறார்.

(தொடரும்)

# ஸ்ரீ வேங்கடேச ப்ரபத்தி

सप्रेमभीति कमलाकरपल्लवाभ्यां
संवाहनेऽपि सपदि क्लममादधानौ ।
कान्ताववाङ्मनसगोचरसौकुमार्यौ
श्रीवेङ्कटेशचरणौ शरणं प्रपद्ये ॥ ७ ॥

ஸப்ரேமபீதி கமலா கரபல்லவாப்யாம்
ஸம்வாஹநேபி ஸபதி க்லம மாததாநௌ |
காந்தாவவாங்மநஸகோசர ஸௌகுமார்யௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

**பதவுரை :** — *ஸ்ரீ வேங்கடேச = திருவேங்கட நாதனே! ஸப்ரேமபீதி=அன்புடனும் அச்சத்துடனும் கமலா கர பல்லவாப்யாம்=திருமகளின் தளிர் போன்ற கைகளால்; ஸம்வாஹநே அபி=பற்றிவிடப் பட்ட போதிலும்; ஸபதி=தற்பொழுதே; க்லமம்= வாட்டத்தை; ஆததாநௌ=வஹிக்கின்றவைகளும்; காந்தௌ=அழகியவைகளும்; அவாங் மநஸ கோசர ஸௌகுமார்யௌ=வாயால் சொல்லப்பட முடியாத மனத்தாலும் நினைக்கப்பட முடியாத மென்மையுடை யவைகளுமான; சரணௌ = உன் திருவடிகளை; சரணம்=சரணமாக; ப்ரபத்யே=அடைகிறேன்.*

**கருத்துரை :**—*த்ரிவிக்ரமாவதாரத்தில் உன் திரு வடிகள் உலகையளந்தன. இராமன் முதலிய அவ தாரங்களில் காடுகளிலும் மலைகளிலும் அலைந்து திரிந்துள்ளன. அத்தகைய உன் திருவடிகள், தளிர் போன்ற தன் கைகளால் திருமகள் பரிவுடன் வருடும் பொழுது, வாடிவதங்கும் மென்மையைக் காட்டு கின்றன. என்னே! கல்லினும் கடுமை, மலரினும் மென்மை!*

लक्ष्मीमहीतदनुरूपनिजानुभाव
नीलादिदिव्यमहिषीकरपल्लवानाम् ।
आरुण्यसंक्रमणतः किल सान्द्ररागौ
श्रीवेङ्कटेशचरणौ शरणं प्रपद्ये ॥ ८ ॥

லக்ஷ்மீ மஹீ ததநுரூப நிஜாநுபாவ
நீலாதி திவ்யமஹிஷீ கரபல்லவாநாம் |
ஆருண்ய ஸங்க்ரமணத: கில ஸாந்த்ரராகௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

**பதவுரை :** — *ஸ்ரீ வேங்கடேச = திருவேங்கட நாதனே! லக்ஷ்மீ=திருமகள்; மஹீ=மண்மகள்; ததநுரூப நிஜ அநுபாவ=அவர்களை யொத்த தம் மஹிமையை யுடையவர்களான; நீலா ஆதி திவ்ய மஹிஷீ=நப்பின்னைப் பிராட்டி முதல்வராய சிறந்த மனைவிகள்—இவர்களின்; கர பல்லவாநாம்=தளிர் போன்ற கைகளினுடைய; ஆருண்ய ஸங்க்ரமணத: கில = செந்நிறம் கலந்ததினால் போல்; ஸாந்த்ர ராகௌ=அடர்ந்த செந்நிற முடையவைகளான; சரணௌ=உன்திருவடிகளை; சரணம்=புகலாக; ப்ர பத்யே=அடைகிறேன்.*

**கருத்துரை :**—*திருமகளும் மண்மகளும் மற்று முள்ள நப்பின்னை முதல்வர்களும் அன்போடு உன் திருவடிகளைப்பற்றி விடுவதால் அவர்கள் திருக்கை களிலுள்ள செந்நிறம் உன் திருவடிகளில் கலந்து விட்டதா? திருக்கைகள் தளிர் போன்றவை. திருவடி கள் மலர்போன்றவை. இடைவிடாது தனித்தனியே யும் சேர்ந்தும் பரிவுடன் பற்றிவிடுகின்றனர். ஆத லின் கலந்துமிருக்கலாம்.*

नित्यानमद्विधिशिवादिकिरीटकोटि -
प्रत्युप्तदीप्तनवरत्न महःप्ररोहैः ।
नीराजनाविधिमुदारमुपाददानौ
श्रीवेङ्कटेशचरणौ शरणं प्रपद्ये ॥ ९ ॥

நித்யாநமத் விதி சிவாதி கிரீட கோடி
ப்ரத்யுப்த தீப்த நவரத்ந மஹ: ப்ரரோஹை: |
நீராஜநா விதிமுதாரமுபாத தாநௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

**பதவுரை :**—*ஸ்ரீ வேங்கடேச=திருவேங்கடவனே! நித்ய ஆநமத் விதி சிவ ஆதி=எப்பொழுதும் வணங்கு கின்றவர்களான அயன் அரன் முதலியவர்களுடைய; கிரீட கோடி ப்ரத்யுப்த=கிரீடங்களின் நுனிகளில் பதிக்கப் பெற்ற! தீப்த நவரத்ந=ஒளியுள்ள ஒன்பது வகை ரத்தினங்களுடைய; மஹ:ப்ரரோஹை:=முளை கள் போன்ற காந்திகளால்; உதாரம்=உத்தமமான, நீராஜநா விதிம்=ஹாரத்தியை; உபாததாநௌ= பெறுகின்றவைகளான; சரணௌ=உன் திருவடி களை; சரணம்=அடைக்கலமாய்; ப்ரபத்யே=அடை கிறேன்.*

**கருத்துரை :**—*அயன் அரன் முதலிய தேவர்கள் எப்பொழுதும் இடைவிடாது தலைவணங்கி உன் திரு வடிகளைத் தொழுகின்றனர். அவர்கள் தலைகளில்*

அணியப் பெற்ற கிரீடங்களில் உயர்ந்த ஒளியுள்ள நவரத்னங்கள் பதிக்கப் பெற்றுள்ளன. அக்கற்களின் காந்திகள் விதைகளிலிருந்து முளைகள் முளைப்பது போல் விளங்குகின்றன. அவை உன் திருவடிகளுக்கு தீபஹாரத்தி செய்வது போல் காண்கின்றன. (எம் பெருமான் திருக்கோயிலுக்கு நல்ல ஆடையணிகள் அணிந்து சுத்தமாய்ச் செல்ல வேண்டும். பணிவதுடன் நின்று விடாமல் ஏதாவது ஒரு தொண்டு செய்ய வேண்டும். அவ்வாறு செய்யத்தவறி விடினும் கருணைக் கடலான கடவுள் ஏதேனும் ஒரு வகையில் நம்மிடமிருந்து தொண்டைப் பெறுகிறான். என்பது உட்கருத்து.)

विष्णोः पदे परम इत्युदितप्रशंसौ
यौ मध्व उत्स इति भोग्यतयाऽप्युपात्तौ ।
भूयस्तथेति तव पाणितलप्रदिष्टौ
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥ १० ॥

விஷ்ணோ:பதே பரம இத்யுதிதப்ரசம்ஸௌ
யௌமத்வ உத்ஸ இதிபோக்யதயாப்யுபாத்தௌ |
பூயஸ்ததேதி தவ பாணிதலப்ரதிஷ்டௌ
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :— ஸ்ரீ வேங்கடேச=திருவேங்கடமுடையானே! யௌ=எவைகள் (திருவடிகள்); 'விஷ்ணோ; பதே பரமே' இதி=விஷ்ணோ:பதே பரமே என்கிற வேத வாக்யப்பகுதியால்; உதித ப்ரசம்ஸௌ=புகழப் பெற்றனவோ; மத்வ உத்ஸ இதி=மத்வ உத்ஸ என்கிற வேத வாக்யப்பகுதியால்; போக்யதயா அபி உபாத்தௌ = அனுபவிக்கத் தக்கவைகளாகவும் கூறப்பெற்றுள்ளனவோ; பூய:=பிறகும்! ததா இதி= அவ்வாறே என்று; தவ=உன்னுடைய; பாணி தல ப்ரதிஷ்டௌ=(வலது) திருக்கையால் காண்பித்துக் கொடுக்கப் பெற்றுள்ளனவோ; தௌ=அத்தகைய; சரணௌ=உன் திருவடிகளை; சரணம்=அடைக்கலமாய்; ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை :— எம்பெருமான் திருவடிகளின் பெருமை உபநிஷத்துக்களில் கூறப்படுகிறது. பரமபதம் சென்றவர்களும் அங்கும் அத்திருவடிகளுக்குக் கைங்கர்யம் செய்தே பேரின்பம் பெறுகின்றனர். ஆதலின் இம்மையிலும் மறுமையிலும் அத்திருவடிகளே நமக்குக்கதி என்று ஸ்ரீனிவாஸன் தனது வலது திருக்கையால் காண்பிக்கின்றான்.

पार्थाय तत्सदृशसारथिना त्वयैव
यौ दर्शितौ स्वचरणौ शरणं व्रजेति ।
भूयोऽपि मह्यमिह तौ करदर्शितौ ते
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥ ११ ॥

பார்த்தாய தத்ஸத்ருச ஸாரதிநா த்வயைவ
யௌ தர்சிதௌ ஸ்வ சரணௌ சரணம் வ்ரஜேதி
பூயோபி மஹ்யமிஹ தௌ கரதர்சிதௌ தே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :— ஸ்ரீ வேங்கடேச = திருவேங்கட நாதனே! யௌ=எந்த; ஸ்வ சரணௌ=உன் திருவடிகள்; பார்த்தாய=அர்ச்சுனனுக்கு; தத் ஸத்ருச ஸாரதிநா=அவனுக்குத் தகுந்த ஸாரதியான; த்வயா ஏவ=உன்னாலேயே; சரணம் வ்ரஜ இதி=சரணம் வ்ரஜ என்ற வாக்யத்தால் (வாக்யத்தைக்கூறி); தர்சிதௌ=காண்பிக்கப் பெற்றனவோ; பூய: அபி=பிறகும்; இஹ=இங்கே (இத்திருக்கோயிலிலே); மஹ்யம்=எனக்கு(ம்); தே கர தர்சிதௌ=உன் (வலது) திருக்கையால் காண்பிக்கப் பெற்றனவோ; தௌ= அத்தகைய; சரணௌ=உன் திருவடிகளை; சரணம்= அடைக்கலமாய்; ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை:— கண்ணன் அர்ச்சுனனுக்கு 'மாமேகம் சரணம் வ்ரஜ' என்று கீதையில் உபதேசித்துள்ளான். 'என்னைசரணம்அடை' என்றே பொருள் வெளிப்படையில் தோன்றும். உண்மையில் 'என் திருவடிகளைச் சரணம் அடை' என்றே அவ்வாக்கியத்திற்குப் பொருள். கண்ணனும் ஸ்ரீனிவாஸனும் ஒருவனே தான். அர்ச்சுனனுக்குக் கீதையில் உபதேசித்த பொருளையே இத்திருமலையில் திருவேங்கடவனாய் நின்று தன் வலது திருக்கையால் காண்பிக்கின்றான்.

मन्मूर्ध्नि कालियफणे विकटाटवीषु
श्रीवेङ्कटाद्रिशिखरे शिरसि श्रुतीनाम् ।
चित्तेऽप्यनन्यमनसां सममाहितौ ते
श्रीवेङ्कटेश चरणौ शरणं प्रपद्ये ॥ १२ ॥

மந்மூர்த்தி காலியபணே விகடாடவீஷு
ஸ்ரீ வேங்கடாத்ரிசிகரே சிரஸி ச்ருதீநாம் |
சித்தேப்யநந்யமநஸாம் ஸமமாஹிதௌதே
ஸ்ரீ வேங்கடேச சரணௌ சரணம் ப்ரபத்யே ||

பதவுரை :— ஸ்ரீ வேங்கடேச=திருவேங்கட முடையானே! மந்மூர்த்நி=என் தலையிலும்; காலீய பணே= காளிய ஸர்ப்பத்தின் தலையி(படத்தி)லும்; விகட அடவீஷு=பரந்த கல் முள் நிறைந்த தண்டகாரண்யம், ப்ருந்தாவனம் முதலிய காடுகளிலும்; ஸ்ரீ வேங்கடாத்ரி சிகரே=திருவேங்கடமலையின் உச்சியிலும்; ச்ருதீநாம் சிரஸி=வேதங்களின் முடியி(உபநிஷத்துக்களி)லும்; அநந்ய மநஸாம்=உன்னைத் தவிர வேறொன்றைக் கருதாதவர்களுடைய; சித்தே அபி= உள்ளத்திலும்; ஸமம் = வேற்றுமையின்றி; ஆஹிதௌ=வைக்கப் பெற்ற; தே=உன்னுடைய; சரணௌ=திருவடிகளை; சரணம்=அடைக்கலமாய்: ப்ரபத்யே=அடைகிறேன்.

கருத்துரை :— இராமனாகவும் கிருஷ்ணனாகவும் அவதரித்தவன் இத்திருவேங்கடமுடையானே. வேதங்களில் கூறப்பெறும் பரம்பொருளும் இத்திருவேங்கடமுடையானே. இவனே பரம்பொருள் என்று பெரியவர்களும் தீர்மானம் செய்து தங்கள் மனத்தில் நிலைபெற நிறுத்தித் தியானிக்கின்றனர். நாமும் அவனையே தொழுதுதான் உய்யமுடியும்.

(தொடரும்)

அன்புள்ள ஆசிரியருக்கு அநேக நமஸ்காரம். நமது ஸநாதன தர்ம மான இந்து மதத்திற்குப் புத்துயிர் அளிக்கும் வகையில் 'ஸப்தகிரி' மாத இதழ் பணியாற்றி வருவது போற்று வதற்குரியது. என்றாலும் நான் அண்மையில் கண்ட 'ஸப்தகிரி' மே 1988 இதழில் 'எம்பெருமானார் தரிசனம்' என்ற தலைப்பில் திரு. கே. ஏ. தேவராஜன் அவர்கள் எழுதிய கட்டுரை பிற மதத்தவர்களை இழிவு படுத்துவதாக உள்ளது. ஏனெனில் மேற்படி கட்டுரையில்(1) பக்கம் 15ல் 'வேதத்தில் பேத, அபேத, கடக ஸ்ருதிகள் உள்ளதால் இவை மூன் றையும் ஒருங்க விட்டவர் ஸ்வாமி பகவத் இராமானுசரே ஆவார்...... த்வைதமோ பேத ஸ்ருதிகளையே ஒப்புக் கொண்டது' என்று உள்ளது. ஆனால் 'வேதைச்ச ஸர்வை ரஹமேவ வேத்யோ' (பகவத் கீதை 15:15) அதாவது 'தத்வமஸி' 'அஹம் ப்ரஹ் மாஸி' என்ற உபநிடத வாக்யங்கள் உள்ளிட்ட அனைத்து வேதங்களாலும் அறியப்படுபவன் நான் ஒருவனே என் கிறான் ஸ்ரீ கிருஷ்ணன். மேலும் 'ஸர்வே வேதா யத் பதமாமனந்தி' (கடோபநிடதம் 2:15) அதாவது 'அனைத்து வேதங்களாலும் போற்றப் படும் பொருள் எதுவோ' என்கிறது உபநிடதம். இதை ஸ்ருதி, ஸ்ம்ருதி, புராணங்களின் ஆதாரத்தின் பேரில், ஸ்ரீ ஆனந்த தீர்த்தர் என்கிற ஸ்ரீமத் வர் அனைத்து வேதங்களாலும் அறியப் படும் பரம்பொருள் ஸ்ரீமன் நாரா யணன் ஒருவனே என நிறுவியுள் ளார். வேதத்தில் மூன்று விதமான வாக்யங்கள் இல்லை. ஆராய்ந்தால் அனைத்து வேதங்களும் ஸ்ரீமன் நாரா யணனின் பெருமையைப் பேசு பவையே என்பது த்வைத சித்தாந் தம். (2) பக்கம் 15-ல் உள்ள ஸ்ரீ ஸ்வாமி தேசிகனின் ஸ்ரீ ஸூக்தியை யாரும் மறுக்கவில்லை. ஆனால் ஸ்ரீ ஸத்யப்ரியரின் ஸ்ரீ ஸூக்தியோ 'ஆபா ஸத்வ மியாய தார்க்கிகமதம் ப்ராப கரப்ரக்ரியா சோபாம் நைவ பபார தூர நிஹிதா வைபாஷிகாத்யுக்தய: ஹ்ரீபாரேண நதாச்ச சங்கர முகா: க்ஷோபாகரோ பாஸ்கர: ஸ்ரீபாஷ்யம் ஜயயோகினி ப்ரவததி ஸ்வாபாவிகோ த்யன் மதௌ', 'இயற்கையாகவே மேதாவியான ஸ்ரீமத் ஜயதீர்த்தர் ஸ்ரீமத்வாசாரியரால் இயற்றப்பட்ட ப்ரஹ்மசூத்ர ஸ்ரீபாஷ்யத்தை வியாக் யானம் செய்கையில் தார்கிக மதம் பொய்த்தது; ப்ராபாகரப்ரக்ரியை களையிழந்தது; பௌத்தர்கள் முதலா னோர் யுக்திகள் தள்ளப்பட்டன; சங் கரர் முதலானோர் வாதங்கள் வெட் கித் தலை குனிந்தன; பாஸ்கரர் சங் கடப்பட்டார்' எனக் கூறுகிறது. எனவே ஸ்ரீ ஸூக்திகளால் மட்டுமே ஒரு மதத்தின் மேன்மையை நிலை நாட்ட வியலாது. அவரவர்களுக்கு அவரவர் மதம் உயர்வே. (3) பக்கம் 15-ல் குறிப்பிடப்பட்ட ஸ்ரீ மணவாள மாமுனிகள் திருவாக்கு தமிழில் உள் ளதுபோல், கன்னடத்தில் ஸ்ரீபுரந்தர தாஸர் இயற்றிய கீர்த்தனையில் 'ஹனு மன மதவே ஹரிய மதவோ, ஹரிய மதவே ஹனுமன மதவோ' என்று உள்ளது. அதாவது 'ஹனுமனின் மதமே ஹரியின் மதம், ஹரியின் மதமே ஹனுமனின் மதம்' என்று பொருள். ஸ்ரீ வாயு பகவானின் அவதாரமான அனுமன், பீமன் இரு வரும் முறையே விஷ்ணுவின் அவ தாரமான இராமன், கிருஷ்ணனின் பக்கமேயிருந்தனர் என்பது இதிகாசங் கள் கூறும் செய்தி. வேறு தேவதை களைப் பற்றி அவ்வாறு இல்லை. சூரி யனின் அவதாரமான சுக்ரீவன், கர்ணன்; இந்திரனின் அவதாரமான வாலி, அர்ஜுனன் ஆகியவர்களைக் காண்க. ஓர் அவதாரத்தில் விஷ்ணு வுடன் உடன்பாடு; மறு அவதாரத் தில் எதிரி என்பதே உண்மை. வேறு தேவர்களுக்கும் இது பொருந்தும். ஆனால் ஸ்ரீ வாயு பகவான் அப்படி இல்லை. ஸ்ரீ வேதவ்யாஸரின் கருத்தை விளக்க ஸ்ரீ வாயு பகவான் எடுத்த அவதாரமே ஸ்ரீமத்வர் என்பது 'பளித்தா' முதலிய வேத மந்திரங் களால் அறியப்படும் செய்தி. (4) பக்கம் 15-ல்...... 'ஆநந்த தீர்த் தரோ மற்ற எந்த பூர்வாசார்யர் களோ இம்மாதிரியான ஸ்ரீஸூக்தியை அருளிச் செய்யாதது...' என்று உள் ளது. 'நாராயணம் குணைஸ் ஸர் வைருதீர்ணம் தோஷ வர்ஜிதம் ஞேயம் ஞம்யம் குரும்சாபி நத்வா ஸூத்ரார்த்த உச்யதே', இது ஸ்ரீம தானந்த தீர்த்தரின் ஸ்ரீபாஷ்ய மங் களாசரண ஸ்லோகம். அதாவது 'பிரம்ம ஸூத்ரம் முதல் அத்யாயத் தில் குறிக்கப்பட்ட அநந்த கல்யாண குணங்கள் நிரம்பியவனும், இரண்டா வது அத்யாயத்தில் சொல்லப்பட்ட வாறு குற்றங்கள் அறவே இல்லாத வனும், மூன்றாவது அத்யாயத்தில் கூறப்பட்டது போல் அறியத்தக்க வனும், நான்காம் அத்யாயத்தின் பொருளான அடையத்தக்கவனும் குருவுமாகிய ஸ்ரீமன் நாராயணனை வணங்கி பிரம்ம சூத்ரங்களின் பொருளைப் பகர்வேன்' எனப் பிர திஞையோடு கூடிய மங்களாசரணத் துடன் தொடங்குகிறது ஸ்ரீ மத்வ பாஷ்யம். 'அன்னியர்கள் தம் கொள் கைகளை பிரம்ம சூத்திரங்களில் புகுத் தினர். நானே பிரம்ம சூத்திரங் களின் சித்தாந்தத்தை வெளிக் கொணர்வேன்' என்பது தொனி. ஸ்ரீமத்வர் தமது நூல்களனைத்திலும் மங்களாசரணத்தில் ஸ்ரீமன் நாரா யணனை வணங்கி, தாம் உரையிடப் போகும் நூலின் செறிந்த கருத்தை விளக்கியுள்ளார். இம்மங்களா சரண ஸ்லோகங்களின் தொகுப்பு இந்து மதத்தின் கையேடாகும்.

மதாசார்யர்களனைவரும் உண்மை யைத்தேடியவர்கள் என்பது தெளிவு. அதனாலேயே அவர்களனைவரும் மரி யாதைக்குரியவர்களாகிறார்கள். ஆனால் அவர்களனைவரும் உண்மை யையே கண்டார்கள் என்பதற்கில்லை. ஏனெனில் அவர்கள் கண்ட முடிவு கள் ஒன்றுக்கொன்று முரண்படுகின் றன. இதை விரிக்கின் பெருகும். உண்மையைக் கண்ட மதாசாரியர் யார்? என ஆராய்வது விஞ்ஞான ரீதியானதாகும். எனவே பிறர் மனம் புண்படும்படியான கட்டுரைகளை வெளியிடாதீர்! என வேண்டிக் கேட்டுக் கொள்கிறேன்.

**திரு. K. நரசிம்மன், MSc., M.Phil.,**
**திருநெல்வேலி.**

# ஏற்றம் பெற்ற ஏழு

கோவிலில் திருவிளக்கு ஏற்றுதல், புஷ்பம் சமர்ப்பித்தல், சந்தனம் பூசுதல், நிவேதனம் செய்தல், தெண்டம் சமர்ப்பித்தல், கோவிலைச் சுற்றி அலம்பி, மெழுகி சுத்தம் செய்தல் மற்றும் கோலமிடுதல் போன்ற ஏழு விதமான பகவத் கைங்கர்யத்தை எம்பெருமான் ஏற்றுக் கொண்டுள்ளார்.

நவமூர்த்தி விதானம், ஷண்மூர்த்தி விதானம், பஞ்சமூர்த்தி விதானம், திரிமூர்த்தி விதானம், ஏக மூர்த்தி விதானம், த்ருவபேரார்ச்சண விதி, மற்றும் த்ருவார்ச்சர விதி என்று சொல்லப்படும் ஏழு வித ஆராதனக் கிரமங்கள் வைகானஸ ஆகமத்தில் பெருமாளை ஆராதிக்கும் விதங்களாக எடுத்துக் காட்டப்பட்டுள்ளன.

காச்யபர், அத்ரி, ஆங்கிரஸர், பிருகு, வசிஷ்டர், கௌதமர், விசுவாமித்திரர் போன்ற ரிஷிகள் "சப்த ரிஷிகள்" என்றும் ஏற்றம் கொண்ட ஏழு ரிஷிகள் என்றும் போற்றப்படுகின்றனர்.

அசுவத்தாமர், மகாபலி, வியாசர், விபீஷணர், கிருபர், பரசுராமர், ஆஞ்சநேயர் என்று சொல்லக்கூடிய எழுவரும் என்றும் நிலைத்து நிற்கும் சிரஞ்சீவிகள்.

நிறங்கள் ஏழு, சமுத்திரங்கள் (கடல்கள்) ஏழு, வாரத்தின் நாட்கள் ஏழு, முக்தி ஸ்தலங்கள் ஏழு, கடை ஏழு வள்ளல்கள், ஸப்தகிரி மற்றும் வான மண்டலத்தில் காட்சியளிக்கும் சப்த ரிஷி நட்சத்திரங்கள் ஏழின் பெருமையை எடுத்துக் காட்டுகின்றன.

மகாவிஷ்ணு ஏழாவது அவதாரமாக ஏழாவது திருநட்சத்திரம் உதயமாகும்போது திருவவதாரம் செய்தார். ஸ்ரீ ராமனின் ஜனன காலத்தில் லக்னத்திற்குப் பின்னால் 7 இராசிகளுக்குள் ஏழு கிரஹங்கள் சஞ்சரிக்கும் நிலையைப் பார்க்கலாம். ஸ்ரீ ராமபிரான் சீதாராப்பிராட்டியாரோடும், தம்பி லட்சுமணனோடும் கானகத்தில் வனவாசம் செய்த காலம் இருஏழுஆண்டுகள் ஆகும். சுக்ரீவனுக்கும் தன் வல்லமையைக் காட்ட ஒரே பாணத்தால் ஏழு மரங்களைத் துளையிட்டுக் காண்பித்தவன் ஸ்ரீ ராமபிரான். "நகரில் நாங்கள் நால்வர் பின்பு, குகன்—சுக்ரீவன்—விபீஷணனோடு எழுவரானோம்" என்று சகோதர பாசத்தை "ஏழு" என்ற எண்ணை வைத்தே காண்பித்தவர் ஸ்ரீராமன். இராமபிரான், இராவணனோடு போர் புரிந்தது ஏழு நாட்கள் என்பதை நினைத்துப் பார்க்கும்போது ஏழின் பெருமை வெளிப்படும். ஏழு ரிஷிகளால் கோர்வையுடன் சொல்லப்பட்டது சப்தரிஷி இராமாயணமாகும். சுந்தர காண்டப் பாராயணத்தை ஸப்தசர்க்கம் என்று சொல்வதுண்டு. பால காண்டம் நான்காவது ஸர்க்கத்தில் இராமாயணம், 7 சுத்த ஜாதி இசையமைப்பில் காணப்படுகிறது. லவ குசலவர்கள் இராமாயணத்தை ஏழிசையால் இசையமைத்துப் பாடினார்கள் என்பதை நினைக்கும்போது ஏழின் பெருமை, ஏற்றம் இராமாயண காவியத்திலேயே தெரிகிறது.

ஸ்ரீ கிருஷ்ணனின் ஜனன காலத்தில் லக்ன முதல் ஏழு ராசிக்குள் ஏழு கிரஹங்கள் சஞ்சரித்தார்கள்.

தில்லையிலே ஆனந்த தாண்டவத்தையும், மதுரையிலே சந்தியா தாண்டவத்தையும், திருக்குற்றாலத்திலே திரிபுர தாண்டவத்தையும், திருவாலங்காட்டிலே காளி தாண்டவத்தையும், திருநெல்வேலியில் முனி தாண்டவத்தையும், திருப்பத்தூரிலே கௌரி மற்றும் ஆனந்த தாண்டவத்தையும் ஏழு வித தாண்டவவகைகளாக அருளியவர் தாண்டவமூர்த்தி.

ஏழு தலத்து எம்பெருமானை நடராசன் திருவாரூரில், அசபா நடனத்தையும், திருவாய்மூரில் கமல நடனத்தையும், திருக்காறாயில் குக்குட நடனத்தையும், திருநாகைக் காரோணத்தில் பாரா வாரா தரங்க நடனத்தையும், திருக்கோளிலில் வண்டு நடனத்தையும், திருமறைக் காட்டில் ஹம்ஸ நடனத்தையும், திருநள்ளாறில் உன்மத்த நடனத்தையும்-நடன வகைக்கு உகந்த ஏழு என்ற எண்ணிக்கையில் நடனமாடிக் காண்பித்தார்.

திரு எம். எஸ். பிச்சுமணி
சென்னை—56.

சோதிட சாஸ்திரத்தில் 'ஹோரை' என்பது 7 கிரஹங்களின் சஞ்சார மாகும். கிரஹங்களின் உச்ச ராசிக்கு 7-ஆம் இடம் நீசமாகும். இராசி மண்டலத்தில் 7 கிரஹங்களுக்கு மட்டும் தான் சொந்த வீடு உண்டு. மேஷம், விருச்சிகம், ரிஷப துலாம், மிதுன கன்னி, கடக சிம்மம், தனுர் மீனம், மகர கும்பம் என்றபடி ஏழு விதமாகப் பிரித்துத்தான் பஞ்சாங்க கணிதத்தில் ஆதாய விஷய பலன்களைச் சொல்லுவார்கள். அகத்தியர் நாடியின்படி தமிழ் எழுத்துக்களுக்குரிய எண்களைப் பார்ப்போம். க் முதல் ன் வரையுள்ள மெய்யெழுத்துக்கள் மற்றும் உ என்ற எழுத்துக்கும் உரிய எண் 1. ஈக்கு 2, அ, எக்கு 3, இ, ஊவுக்கு 4, ஐ, ஔக்கு 5, ஏ, ஆவுக்கு 6, ஒ ஓவுக்கு 7. எனவே ஏழின் பெருமை உயர்வாகிறது. ஆங்கில ஆராய்ச்சியாளர்கள் "கீரோ"வின் கணித அடிப்படையின் படி சூரியனுக்கு 1ம், சந்திரனுக்கு 2ம், செவ்வாய்க்கு 9ம், புதனுக்கு 5ம், குருவுக்கு 3ம், சுக்கிரனுக்கு 6ம், சனிக்கு 8ம் வைத்து நியூமராலஜி என்று பெயரிட்டு வைத்துள்ளார். இதன் கூட்டுத் தொகையைப் பார்த்தால் "7" என்றே வரும். $(1+2+9+5+3+6+8 = 34 = 7)$

சங்கீதத்தில் ஏழின் பெருமை ஸ-ரி-க-ம-ப-த-னி என்ற ஸப்த ஸ்வரங்களில் சொல்லப்பட்டுள்ளது. ஷட்ஜமம், ரிஷபம், காந்தாரம், மத்திமம், பஞ்சமம், தைவதம், நிஷாதம் என்றபடி ஏழு பிரிவாகவும் விளக்கப்பட்டுள்ளது.

மயில்-பசு-ஆடு-கிரவுஞ்சம்-குயில்-குதிரை-யானைபோன்றவைகளின் ஒலி

களைக் கொண்டு 7 விதமாக ஸ்வரங்கள் ஏற்படுத்தப்பட்டுள்ளன.

குரல்-துத்தம்-கைக்கிளை – உழை-இளி-விளரி-தாரம் என்ற விதமான ஏழு இசைக் கருவிகள் உள்ளது.

மகுடியை புஜங்க விபரம் என்றும், நாக சின்னம் என்பது நாதஸ்வரம் என்றும், மகர நாடக வீணை என்பது கோட்டு வாத்யம் என்றும் வீணை-முகவீணை, ஷெனாய்-தார் ஷெனாய் என்றும் சங்கீதத்தில் வாத்யங்களின் பெருமையை ஏழு விதத்தில் கூட்டியுள்ளார்கள்.

மேற்கத்திய இசை வல்லுநர்கள், இசையின் பெருமையை C-D-E-F-G-A-B என்ற ஏழு ஆங்கில எழுத்துக்களைக் கொண்டு காண்பித்து இதற்கு 'Notes" என்று பெயரிட்டு ஏழின் ஏற்றத்தை உலகம் முழுவதும் பரப்பினார்கள்.

கொள்கையற்ற அரசியல், உழைப்பில்லாத செல்வம், தியாகமற்ற இறை வணக்கம், மனசாட்சியற்ற உல்லாச வாழ்க்கை, மனிதாபிமானமற்ற அறிவியல், குணமில்லாத அறிவு, லாபம் இல்லாத வர்த்தகம்போன்ற ஏழும் தீயவை தரும் ஏழாகும்.

ஏழ்மையிலும் நேர்மை, கோபத்திலும் பொறுமை, தோல்வியிலும் விடா முயற்சி, வறுமையிலும் பரோபகாரம், துன்பத்திலும் தைரியம்' செல்வத்திலும் எளிமை, பதவியிலும் பணிவு போன்ற ஏழும் நல்லவைகளைக் குறிக்கும்.

சிந்தித்துப் பேசு, உண்மையைப் பேசு, அன்பாய்ப் பேசு, மெதுவாகப் பேசு, சமயமறிந்து பேசு, இனிமையாகப் பேசு, பேசாதிருந்தும் பழகு என்ற ஏழும் நம் வாழ்க்கைக்கே வழி காட்டும்.

இப்படியாக ஏழின் பெருமை ஏற்றம் கொண்டு விளங்குகிறது. Seven is Heaven என்று ஆங்கிலத்தில் சொல்வார்கள். பெரியோர்கள் சொல்லிவைத்தது என்றும் மாறுது. ஆராய்ச்சி செய்து பார்த்தால் அற்புதங்கள் வெளிப்படும்.

இப்பூவுலகில் உள்ள மொத்த அதிசயங்கள் "ஏழு" என்றுதான் சொல்லிவைத்தார்கள். எனவே ஏற்றம் பெற்ற ஏழு, ஏழு பிறவியிலும் வந்து கொண்டேயிருக்கும்.

ஏழுமலையின் பெருமை ஸப்தகிரி வாசகர்களுக்கும் புரியும்.

### தி. தி. தேவஸ்தானத்தாரின்
# ஸ்ரீ பத்மாவதி தாயார் திருக்கோயில், திருச்சானூர்

## தினசரி நிகழ்ச்சி நிரல்கள்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 5-00 | முதல் | 5-30 | வரை | —சுப்ரபாதம் |
| 5-30 | ,, | 6-00 | ,, | —ஸகஸ்ரநாம அர்ச்சனை ரூ. 6-00 (நான்கு நபர்கள் மட்டுமே அனுமதிக்கப்படுவர்) |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி—முதல்மணி |
| 6-30 | ,, | 11-30 | மதியம் | —ஸர்வதரிசனம் |
| 11-30 | ,, | 12-30 | ,, | —சுத்தி, 2-வது மணி |
| 12-00 | ,, | 6-00 | மாலை | —ஸர்வதரிசனம் |
| 6-00 | ,, | 6-30 | ,, | —சுத்தி, 3-வது மணி |
| 6-30 | ,, | 9-15 | இரவு | —ஸர்வதரிசனம் |
| 9-15 | ,, | 9-30 | ,, | —சுத்தி, ஏகாந்தசேவை |

## வெள்ளிக்கிழமைகளில்

காலை

| | | | | |
|---|---|---|---|---|
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேகம் (ரூ. 100/- செலுத்தி இரு நபர்கள் பங்கேற்கலாம்) |
| 9-00 | ,, | 10-00 | ,, | —அபிஷேக தரிசனம் (ரூ. 2/- நபர் ஒருவருக்கு) |

## ஆர்ஜிதக் கட்டண விவரங்கள்

1 தரிசனம்—சிறப்பு நுழைவுக் கட்டணம் ரூ. 5/- (நபர் ஒருவர்க்கு)

| ஆர்ஜித நைவேத்தியங்கள் | | | ஆர்ஜித சேவைகள் | |
|---|---|---|---|---|
| (அ) பொங்கல் | ,, | ரூ. 110/- | (அ) திருச்சி உற்சவம் | ரூ. 63-00 |
| (ஆ) புளியோரை | ,, | ரூ. 100/- | (ஆ) யானை வாகனம் | ரூ. 82-00 |
| (இ) தத்யோதனம் | ,, | ரூ. 75/- | (இ) தோலோற்சவம் | ரூ. 160/- |
| (ஈ) கேஸரிபாத் | ,, | ரூ. 180/- | (வெள்ளிக்கிழமைகளில் மட்டும்) | |
| (உ) சர்க்கரைப் பொங்கல் | ,, | ரூ. 135/- | (ஈ) திருப்பாவாடை (கிருஹஸ்தர்க்கு 5 கிராம் எடையுள்ள வெள்ளிடாலர் கொடுக்கப்படும்) | ரூ. 2000/- |
| (ஊ) தோசை | ,, | ரூ. 300/- | (அர்ச்சனை(அஷ்டோத்ரம்)செய்ய விரும்பும் பக்தர்கள் அதற்கான ரூ. 1-50க்கான டிக்கெட்டினைக் கோயிலிலேயே வாங்கிக் கொள்ளலாம். இதுபோது பக்தரின் பெயரும், கோத்ரமும் வாசிக்கப்படும்) | |
| (எ) ஸாகரபாத் | ,, | ரூ. 150/- | | |
| (ஏ) ஸீரா | ,, | ரூ. 300/- | | |

* திருப்பதியிலிருந்து 5 கி. மீ. தொலைவிலுள்ள திருச்சானூருக்குப் போய்வர பேருந்து வசதியுண்டு.

இந்துக்கள் அனைவரும் வேற்றுமையின்றிக் கொண்டாடும் திருநாள். தீபாவளி கொண்டாடும் முறைகள் மாறுபட்டிருக்கலாம். அடிப்படை ஒன்றுதான். தீபாவளி என்ருல் தீபம்—விளக்குகள் ஆவளி—வரிசை. விளக்குகளின் வரிசை என்று பொருள்.

நம் இந்து சமயத்தில் ஒவ்வொரு திருநாளின் கொண்டாட்டத்திலும் ஓர் தத்துவம் மிளிரும். அதை விளக்க ஒரு சம்பவமும் இருக்கும். தீபாவளித் திருநாளுக்குக் காரணமாக ஓரிரு சம்பவங்களைக் கூறுவதுண்டு.

ஒன்று நரகாசுரனை ஸ்ரீ கிருஷ்ண பரமாத்மா விடியற்காலை வேளையில் தான் வதம் செய்தார். இறப்பதற்கு முன் நரகாசுரன் பகவானிடம் "இருள் நீங்கி ஒளி பிறக்கும் இந்த நேரத்தை மக்கள் கொண்டாட வேண்டும்" என்று கேட்டுக் கொண்டானும். இயற்கையாகவே இருள் விலகி ஒளி உதயமாகும் நேரத்தில் ஆணவம் அகங்காரம் கொண்டு இருண்டு கிடந்த நரகாசுரன் அழிந்தது எவ்வளவு பொருத்தமானது !

# தீபாவளி

நரகாசுரன் அழிந்தான் என்று சொல்லுவதைவிட, பகவான் அருளினுல் ஆணவமும் அகங்காரமும் அழியப் பெற்ருன் என்று சொல்லுவதே பொருத்தமாகும். அகந்தையும் ஆணவமும் அழிந்தால் யாரும் ஆண்டவன் சந்நிதியை அடையலாம் என்பது தத்துவம் உண்மையாகும்.

இன்னெரு சம்பவம்—மகாபலி சக்ரவர்த்தியை ஸ்ரீமந்நாராயணன் வாமனன் உருவத்தில்வந்து ஆட்கொண்ட பொழுது, மகாபலி சக்கரவர்த்தி "திங்களுக்கே தானம் தந்து மிகப் பெரும் புண்ணியம் அடைந்தேன். இந்த நிகழ்ச்சி நடந்த 3 நாட்களில் இடையில் உள்ள நாளான சதுர்த்தசியில் இருள் விலகி விடிவெள்ளி தோன்றும் நேரத்தில் மக்கள் எண்ணெய் நீராடி இந்தப் புனிதமான நிகழ்ச்சியைக் கொண்டாட வேண்டும். இந்த மூன்று நாட்களும் மக்கள் தங்கள் இல்லங்களில் விளக்கேற்றி வைத்து மாயையாகிய இருளை ஞான ஒளியால் நீக்கியருள இறைவனை வேண்டிக் கொள்ள வேண்டும்'' என்று கேட்டுக் கொண்டானும்.

விஷ்ணு புராணத்தில் தீபாவளியன்று விடியற்காலையில் நீராடி மகாலட்சுமியைப் பூஜித்து, தீபங்கள் ஏற்றி வீட்டின் பல இடங்களில் வைத்தால், அந்த ஒளிபடும் இடங்களிலெல்லாம் திருமகள் தேடி வந்து நின்றருள் புரிவாள் என்று கூறப்பட்டிருக்கிறது.

பவிஷ்ய புராணத்தில், தீபாவளியன்று மாலையில் வீட்டுக்கு வெளியே தீபங்களை ஏற்றி வைத்தால் யமன் திருப்தி அடைவான் என்று கூறப்படுகிறது. அவ்வாறு செய்து கொண்டாடுபவர்களின் இல்லத்தில் அகால மரணம் நேரிடாது என்றும், அவ்விதம் நல்ல வாழ்க்கையை நடத்துபவர்களுக்கு நரகபயம் இல்லையென்றும் சொல்லப்பட்டிருக்கிறது.

தீபாவளியைக் கொண்டாடுவதன் பின்னணியில் பலவிதக் காரணங்களும் பல முறைகளும் இருந்தாலும் அடிப்படைக் காரணம் முதலில் சொன்னபடி மாயை இருள் அகன்று ஞான ஒளிபெற வேண்டும் என்பதே.

தண்ணீரில் கங்கையும், எண்ணெயில் திருமகளும் இருப்பதாக ஒரு நாளும் நேரமும் உண்டு. அந்த நாள் தான் தீபாவளித் திருநாள். அந்த நேரம்தான் அன்றைய வைக்கறை நேரம். எனவேதான் தீபாவளியன்று வைகறைப் பொழுதில் எண்ணெய் தேய்த்து நீராடி விளக்கேற்றி இறைவனை வணங்கி அருள்பெறுகிருர்கள்.

வெறுமனே உடல் அளவில் தலை முழுகுவதுடன் மட்டுமல்லாமல், மனத்தளவிலுள்ள ஆணவம், அகந்தை இவற்றுக்கும் சேர்த்துத் தலை முழுகிவிட்டால்தான் அங்கே ஞான ஒளி வீசும்.

தீபாவளியின் அடிப்படைத் தத்துவம் தெரிந்தவர்கள், எண்ணெய் நீராடும்பொழுதே தங்கள் மனதில் அதுவரை இருந்த அகந்தை, ஆணவம், அறியாமை முதலியவற்றுக்கும் சேர்த்தே தலை முழுகியதாக நினைக்கிருர்கள். அப்படி அந்த நாளில் நினைப்பதே அவர்கள் உள்ளத்தில் தெய்வீகத்தை நிரப்பும். அவ்விதம் தெய்வீகம் நிரம்பியதற்குச் சான்ருய் திங்களைச் சுற்றிலும் விளக்கேற்றி வைத்து நாயகன் தாள் பணிகிருர்கள்.

*(நன்றி ஸ்ரீராமகிருஷ்ண விஜயம்)*

நரகாசுரன் பிரார்த்தனையினுல் இந்தத் தீபாவளியானது ஒரு புண்ணிய காலமாக ஏற்பட்டது. சாதாரண தினங்களில் சூரியன் இல்லாத சமயத்தில் எண்ணெய் தேய்த்துக் கொள்ளக்கூடாது. காலையில் எட்டரை மணிக்கு முன்பும், ஸாயங்காலம் பிரதோஷ காலத்திற்குப் பின்பும் எண்ணெய் தேய்த்துக் கொள்ளக் கூடாது. ஆனுல் தீபாவளியில் உஷத் காலத்தில் எண்ணெய் தேய்த்துக் கொள்ள வேண்டும். எண்ணெய் ஸ்நானம் ஆனபின்பு புண்ணிய தீர்த்த ஸ்நானம் செய்ய வேண்டும். இல்லாவிட்டால் புண்ணிய தீர்த்தத்தை நினைத்துக் கொண்டாவது ஸ்நானம் செய்ய வேண்டும்.

வித்வான் எ. என். சுப்பிரமணியன்,
குடியாத்தம்.

இந்த தீபாவளிக்கு நரக சதுர்த்தசி என்று பெயர். இதற்கு முதல் நாள் மஹாபலி தீபம். மறு நாள் குபேர பூஜை. நாம் தீபாவளியை மாத்திரம் கொண்டாடுகிறோம். வடதேசத்தில் இந்த மூன்று நாளையும் சிறப்பாகக் கொண்டாடுகிருர்கள். ஆகையால் தீபாவளியன்று எல்லோரும் எண்ணெய் தேய்த்துக் கொண்டு வெந்நீரில் ஸ்நானம் செய்ய வேண்டும். பின்பு கங்கையை ஸ்மரித்துக் கொண்டு,

> ',கங்கே ச யமுனேச்சைவ கோதாவரி
> சரஸ்வதி, நர்மதே ஸிந்து காவேரி
> ஜலேஸ்மின் சந்நிதம் குரு''.

புண்ணிய தீர்த்தத்தில் ஸ்நானம் செய்ய வேண்டும். பிறகு பரமாத்மாவின் அநுக்ரஹத்தைக் கோரி அவரைத் தியானம் செய்யுங்கள்.

# அடியவரை நாடிய ஆண்டவன்

“ஏன்று நீ அன்று நான்” என்கிறார் தாயுமானவர். ஆண்டவன் என்று தோன்றினாரோ அன்றே ஆன்மாக்களும் தோன்றியுள்ளன. ஆன்மாக்கள் பக்குவம் அடைவதற்காகப் பல அனுபவங்களைப் பெறுகின்றன. முயற்சிகள் வெற்றியும் தோல்வியுமாக மாறி மாறி நடைபெற்றுக் கொண்டேயிருக்கின்றன. ஆன்மாக்களின் முயற்சி தொடர்ந்து இருக்குமாயின் அவ்வான்மா பிறவாப் பெருநிலை பெற்று பேரின்பம் பெருவாழ்வு அடைகிறது. இல்லையேல் அவ்வான்மாக்களின் நல்வினை, தீவினைகளுக்கேற்ப பிறவிகள் எடுத்து நன்மை தீமைகளை அனுபவித்துக் கொண்டிருக்கின்றன.

திரு. க. கருப்பையா எம்.ஏ., பி.எட்.,
இராஜபாளையம்.

பிறவிப் பெருங்கடலிலிருந்து நீந்திக் கரை சேர முடியாமல் தத்தளிக்கின்றன. பற்றுக்கோடு, தெப்பம், படகு இவை கரைசேர்ப்பன. பிறவிப் பெருங்கடலிலிருந்து நம்மைக் கரை சேர்ப்பன இறைவனுடைய திருவடிகளும், திருநாமங்களும், மந்திரங்களும் ஆகும். அதனால்தான் திருவள்ளுவர்

“ பிறவிப் பெருங்கடல்நீந்துவார் நீந்தார்
இறைவன் அடிசேரா தார். ”

என்று கூறினார்.

இறைவனது திருவடியைப் பற்றியவர் பிறவிப் பெருங்கடலிலிருந்து நீந்திக் கரை சேர்வர்; ஏனையோர் சேரார் என்பது பெறப்படும் உண்மையாகும்.

திருநாவுக்கரசு சுவாமிகள் “நமச்சிவாயவ மந்திரத்தை நம்பிக் கூறியதனால்தான் பல்லவ மன்னனின் ஆணையால் பெரும் பாறையில் கட்டிக் கடலில் போடப்பட்டபோதுகூட பாறை மிதந்தது. கரைசேர்ந்தார். இது வரலாறு கண்ட உண்மை. 7-ஆம் நூற்றாண்டில் மக்கள் நேரில் கண்ட உண்மையாம். இதனைத் திருநாவுக்கரசர் தம் தேவாரத்தில் கூறியுள்ளார்.

“ சொற்றுணை வேதியன் சோதி வானவன்
பொற்றுணைத் திருந்தடி பொருந்தக் கைதொழக்
கற்றுணைப் பூட்டியோர் கடலிற் பாய்ச்சினும்
நற்றுணை யாவது நமச்சிவாயவே. ”

மாணிக்க வாசகப்பெருமாள் அரிமர்த்தன பாண்டிய மன்னனின் அமைச்சராக இருந்தபோது குதிரை வாங்குவதற்காகச் சென்றார். திருப்பெருந்துறையில் ஆண்டவன் குருவடிவாகக் காட்சி அளித்து ஆட்கொண்டார். அவர் தம் திருவாசகத்தில் சிவபெருமான் தன்னையே அடியவராகிய மாணிக்கவாசகருக்கு அளித்துவிட்டு மாணிக்கவாசகரைப் பெற்றுக் கொண்டதாகவும் இதனால் எல்லையற்ற பேரானந்தம் தாம் பெற்றதாகவும் தன்னைப் பெற்றதால் சிவபெருமான் என்ன இன்பம் பெற்றார்? என்று கேட்டு இதில் தானே மிகவும் சாமர்த்தியசாலி என்ற பொருளில் கல்லையும் நெகிழ்ந்துருகச் செய்யும் பாடலைப் பாடியுள்ளதை அவர்தம் திருவாசகத்தால் அறியலாம்.

“ தந்தது உன் தன்னை கொண்டது என் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்?
அந்தம் ஒன்று இல்லா ஆனந்தம் பெற்றேன்
யாது நீ பெற்றது ஒன்று என் பால்?
சிந்தையே கோயில் கொண்ட எம்பெருமான்
திருப்பெருந்துறை உறை சிவனே
எந்தையே ஈசா உடல் இடம்கொண்டாய்
யான் இதற்கு இலன் ஓர் கைம்மாறே ”

மூன்று வயதுப் பாலகனாக இருந்த திருஞான சம்பந்தர் சீர்காழித் தெப்பத்திலே தந்தை மூழ்கிக் குளித்த போது தந்தை நீரில் மூழ்கி விட்டார் எனக்கருதி ‘அம்மே! அப்பா!’ என்று கோபுரத்தைப் பார்த்து அழைத்து அழுதருளினார். உடன் அம்மையப்பர் தோன்றினார். மூன்று வயதிலேயே உமையம்மையின் திருமுலைப்பால் அருந்தும் பேறு பெற்ற திருஞான சம்பந்தர் உவமையிலாக் கலைஞானம் பெற்ற திறத்தைச் சேக்கிழார் பெருமான் பாடியுள்ளார்.

“ சிவனடியே சிந்திக்கும் திருப்பெருகு சிவஞானம்
பவமதனை அறமாற்றும் பாங்கினில் ஓங்கிய ஞானம்
உவமையிலாக் கலைஞானம் உணர் வரிய மெய்ஞ்ஞானம்
தவமுதல்வர் சம்பந்தர் தான் உணர்ந்தார் அந்நிலையில். ”

மூன்று வயதுப் பாலகனாக இருந்த திருஞான சம்பந்தர் இறைவனது திருக்காட்சி சுட்டிக் காட்டுவதாக அமைந்த அவர்தம் முதல் தேவாரப் பாடலைக் காணலாம்.

“ தோடுடைய செவியன் விடையேறி ஓர் தூவெண்மதி சூடி
காடுடைய சுடலைப்பொடி பூசி என் உள்ளங்கவர் கள்வன்
ஏடுடைய மலரான்முனைநாட் பணிந் தேத்த அருள் செய்த
பீடுடைய பிரமாபுரம் மேவிய பெம்மான் இவனன்றே!”

ஸ்ரீபத்மாவதித்தாயார் கோயில், திருச்சானூர்.

வருடாந்திர பிரம்மோத்சவம்

5-12-88 முதல் 13-12-88 வரை

| | |
|---|---|
| 9-12-88 | கஜ வாகனம் |
| 10-12-88 | கருட சேவை |
| 12-12-88 | திருத்தேர் |
| 13-12-88 | பஞ்சமி தீர்த்தம் |

இது போன்றே பெரிய புராணத்தில் ஆண்டவன் அடியவர்களை நாடி வந்த காட்சிகளைப் பல இடங்களில் காணலாம்.

தினைப்புனம் காத்து வந்த வள்ளியை ஆட்கொள்வதற்காக முருகப் பெருமான் நிகழ்த்திய திருவிளையாடலைக் கந்த புராணத்தில் காணலாம். வேட்டுவ வேடத்தில் சென்ற முருகப் பெருமான் வள்ளியின் தந்தை வந்தபோது வேங்கை மரமானான். பின்பு முதிய சிவனடியாராக உருவெடுத்தார். பின்பு ஆனைமுகக் கடவுள் ஆசி வேண்டிப் பிரார்த்தித்தார். விநாயகப் பெருமான் யானையாக வந்து ஆசி வழங்கினார். வள்ளி திருமணம் நடைபெறுகிறது. பக்குவமடைந்த ஆன்மாவை ஆட்கொள்வதற்காகவே இந்தத் திருவிளையாடலை முருகப் பெருமான் நிகழ்த்திக் காட்டினார்.

பாரதத்திலும் இராமாயணத்திலும் ஆண்டவன் அடியவரை நாடி வந்த அருட்காட்சிகளைக் காணலாம். கண்ணன் யசோதை பாலகனாக இருந்தபோது ததிபாண்டன் என்பவன் வீட்டில் ஒளியச்சென்றான். ததிபாண்டனுடைய தெருவிலுள்ளோருக்கெல்லாம் முத்தி அளித்ததோடு அவனுடைய தயிர்ப்பானைக்கும் முத்தி அளித்தான். முதலையின் பிடியில் அகப்பட்ட யானை 'ஆதி மூலமே' என்று அழைத்தவுடன திருமால் அருள் புரிந்தார். காத்து அருளிய காட்சிகளைக் கவித்தலம்வேலையர் மடக்கணியாகப் படம் பிடித்துக் காட்டுகிறார்.

"சோலையும் காத்து நல்லானையும்
காத்துத்
துரோபதைதன்
தானையும் காத்து அடைந்தானையும்
காத்துத் தடத்தகலி
மானையும் காத்து அனுமானையும்
காத்து
மடுவில் விழும்
ஆனையும் காத்தவனே! எனைக்
காப்பதரிதல்லவே!"

கண்ணபிரான் கர்ணனுக்கு விஸ்வரூப தரிசனத்தைக்காட்டி அவனுக்கு வேண்டிய வரத்தை அளித்து அருள் புரிந்த பான்மையை வில்லிபுத்தூரார் பாரதத்தில் வெளிப்படுத்துகிறார்.

மல்லலம் தொடையல் நிருபனை
முனிவன்
மகிழ்ந்து நீ வேண்டிய வரங்கள்
சொல்லுக! உனக்குத் தருதும்
என்றுரைப்பச்
சூரன்மா மதலையும் சொல்வான்
அல்லல் வெவ்வினையால் இன்னம்
உற்பவம்
உண்டாயினும் மேலெழு பிறப்பும்
இல்லையென்று இரப்போர்க்கு இல்லை
யென்று
உரையா இதயம் நீ அளித்தருள்
என்றான்.

இராமாவதாரத்தில் இராமபிரான் சபரியின் ஆசிரமத்திற்குச் சென்று அவள் எச்சிற்படுத்திய கனியை விரும்பி ஏற்றுக் கொண்டான். குகன் அன்புடன் செய்த சேவையை அனுமதித்து அவனைத் தன் தம்பியருள் ஒருவனாக்கி அகமகிழ்ந்தான் இராமபிரான். சடாயுவுக்கு மோட்சம் கொடுத்தார். வாலிக்கு மோட்சம் அருளினார்.

எனவே, அடியவர் அழைக்காமலேயே அருள் புரிவதற்காக இறைவன் தானாக மகிழ்ந்து வரும் பான்மையை துறைமங்கலம் சிவப்பிரகாசர் பிரபுலிங்கலீலை என்னும் நூலின் கடவுள் வாழ்த்துப் பாடலில் படம் பிடித்துக் காட்டுகிறார். கை, கால் இல்லாத முடவன், உயர்ந்த மரத்தின் உச்சியில் உள்ள பெரிய தேனடையிலிருந்த தேனை விரும்பினாலும் தானாக அவனது நாவில் வந்து தேன் ஒழுகியது போல தேவர்களும் காண்பதற்கரிய சிவபெருமான் பக்தர்களின் கையில் தானாக மகிழ்ந்து வந்து அமர்கிறார் என்பதை அவருடைய பாடலின் மூலம் அறியலாம்.

பூவாய் நெடுங்கோட்டுறு பசுந்தேன்
கை கால் முடங்கு பொறியிலதன்
நாவாய் ஒழுகிற்று என .........
............. .........
காவாய் என நின்றேத் தெடுப்பத்
தானே உவந்து எங்கரத்தலத்தில்
மேவா அமர்ந்த மாமணியைத்
தொழுது
வினைக்கு விடைகொடுப்பாம்.

எனவே, நாம் பக்குவமடைந்து நம்மைப் பக்தர்களாக மாற்றிக் கொண்டால் இறைவனை நாடி நாம் செல்ல வேண்டியதில்லை. நம்மை நாடி ஆண்டவன் வருவான்; அருள்புரிவான் என்பதை அறியலாம்.

# தானேயாகி நிறைந்தானே!

உலகம் யாவையும் தாமே முன்னின்று உண்டாக்கி, நிலைபெறச் செய்து அழித்து அலகிலா விளையாட்டுடைய பரம்பொருள் ஒவ்வொரு ஆன்மாவிலும் தானே உள் நின்று பரிணமித்து உயிர்களைத் தன்னுடைய அருளாட்சியின்கீழ்செலுத்துகின்றது.

"ஏனோர் அஞ்ச வெஞ்சமத்துள்
அரியாய்ப் பதிய இரணியனை
ஊன் ஆர் அகலம் பிளவெடுத்த
ஒருவன் தானே இருசுடராய்
வானாய்த் தீயாய் மாருதமாய்
மலையாய் அலைநீர் உலகனைத்தும்
தானாய், தானும் ஆனான்தன்
சாளக்கிராமம் அடை நெஞ்சே"

என்று திருமங்கையாழ்வார் அருளுவதிலிருந்து எம்பெருமான் தான் படைத்த உலகத்தில் தானே பலவாறாய் வெளிப்படுகிறான் என்பது நன்கு தெரியவருகிறது. ஆறறிவு படைத்த மனிதர்கள் அறமல்லாதனவற்றை அறமென்றும், நெறியல்லா நெறியில் நின்றும், ஐம்புலன்களுக்கு ஆட்பட்டும், உண்மையை உணர்ந்து செயல்பட மறுக்கின்றனர். எனவே இப்புவியில் பிறப்பெடுத்துள்ள நாம் இதனைப் படைத்துக் காத்து நிற்கும் இறைவனுக்கு ஆட்பட்டு அவன் வழியில்செயல்பட்டுத்துன்பமில்லா இன்ப வாழ்வில் திளைக்க வேண்டுமென அவனருள் பெற்ற அடியவர்கள் விரும்புகின்றனர்.

உலகைத் தாமே முன்னின்று படைத்த எம்பெருமான் அதில் வாழும்உயிர்கள் உய்யும்பொருட்டுத் திருத்தலங்கள்தோறும் அர்ச்சாவதார மூர்த்தியாய் எழுந்தருளி இன்னருள் பாலிக்கின்றான். திருக்கோயிலுள்ளேயிருக்கும் திருமேனியையும் உலகப்பொருட்களிலும் இறையையே காணும் அடியவர்கள் அவ்விறைவனைத் தங்கள் உள்ளத்திலும் ஆன்மாவிலும் கண்டு ஆனந்தம் கொண்டனர். பார்க்குமிடமெங்கும் நீக்கமற நிறைந்துள்ள எம்பெருமான் மேவியிருப்பது தூய உள்ளத்தில்தான் என அவர்கள் நிரூபிக்கின்றனர்.

"நின்றது எந்தை ஊரகத்து இருந்தது
எந்தை பாடகத்து
அன்று வெஃகணைக்கிடந்தது என்
னிலாத முன்னெலாம்
அன்று நான் பிறந்திலேன் பிறந்த
பின் மறந்திலேன்
நின்றதும் இருந்ததும் கிடந்ததும்
என் நெஞ்சுளே"

என்று திருச்சந்த விருத்தத்தில் திருமழிசைப்பிரான் அருளிச் செய்வதிலிருந்து எம்பெருமான் எக்கோலம் கொண்டாலும் எந்நிலையில் நின்றாலும் அனைத்துக்கோலங்களையும் நெஞ்சில் நிறுத்தி பிறவியெடுத்ததன் பலனை அனுபவித்து வாழ வேண்டுமென வேண்டுகின்றார். 'இமைப்பொழுதும் என்னெஞ்சின் நீங்காதான் தாள் வாழ்க' என மணிவாசகப் பெருமான் வேண்டுவதும் இதனால் தான்போலும். 'நிலையற்ற இம்மனிதப் பிறவியைப் போக்கி, தன்னுடைய வணக்கிக் கொண்டு, தனது இனிமை பொருந்திய அருளினை அளிக்கும் தலைவனாகிய எம்பெருமான் மின்னல் பொருந்திய மேகங்கள் சூழ்ந்துள்ள திருவேங்கடத்தில் எழுந்தருளி ஆனை போன்று கம்பீரமாக நிற்கும் என் அப்பன் என் நெஞ்சில் உளானே' என்று திருமங்கையாழ்வார் திருவாய் மலர்ந்து அருளிச் செய்துள்ளமை இன்புறத்தக்கது. திருவாய்மொழியில் நம்மாழ்வார் 'அற்புதன் நாராயணன் அரிவாமனன் நிற்பதும் மேவியிருப்பது என்னெஞ்சகம்' என்று பாடுகின்றார்.

இறைவன் தனது இயல்பான கருணையினால் இவ்வுயிர்கள் நற்கதியடைய தனு கரண புவனயோகம் என்று அனைத்தும் அருளிச்செய்துள்ளான். தானே வந்து திருக்கோயில்களில் உறைந்து அருள்கின்றான். நல்ல உள்ளம் கொண்டிலங்கும் அடியவர்களை ஆட்கொண்டு அவர்கள் மூலம் அருள் வழங்குகின்றான். இறைவனே விரும்பி உள்ளம் புகுந்து அருள் வழங்குவது ஒருவகை. எடுத்துக்காட்டாக,

பெற்றார் பெற்றொழிந்தார் பின்னும்
நின்றடியேனுக்கு
உற்றானாய் வளர்த்து என்னுயிராகி
நின்றானை
முற்றாமாமதி கோள் விடுத்தானை
யெம்மானை
எத்தால்யான் மறக்கேன் இது சொல்
லென்னே ஏழைநெஞ்சே

என்று எம்பெருமானே பெற்றோர்களுக்குப்பின் உற்றதுணையாய் நின்று உயிருக்கு உயிராகி நின்று வளர்த்தான் என்று நன்றி கடப்பாடுடன் திருமங்கையாழ்வார் அருள்கின்றார். அப்படி இறையருள் இனிதே கைவரப் பெற்றவர்கள் அதனை எக்காலத்தும் இழந்துவிடாமல் இடைவிடாது நினைத்து உள்ளன்போடு உருகுவார்கள்.

எஞ்சா வெந்நரகத்து அழுந்தி நடுங்கு
கின்றேற்கு
அஞ்சேலென்று அடியேனை ஆட்
கொள்ள வல்லானை
நெஞ்சே நீ நினையாது இறைப்
பொழுதும் இருத்திகண்டாய்
மஞ்சார் மாளிகைசூழ் வயலாலி
மைந்தனையே

டாக்டர். ஆர். கோபாலகிருஷ்ணன்,
M.A. Ph.D.
சென்னை-5

## சந்தாதாரர்களுக்கு . . .

31-12-88—ஆம்தேதியுடன் முடிவடையும் ஸப்தகிரி சந்தாதாரர்களின் எண்கள் கீழே கொடுக்கப்பட்டுள்ளன. சந்தாவைப் புதுப்பித்துக்கொள்ளும்போது, தங்கள் சந்தா எண்களைக் கண்டிப்பாகக் குறிப்பிடவும். ஆங்கிலத்தில் 'ஆசிரியர்' ஸப்தகிரி, தி.தி.தே. திருப்பதி எனும் முகவரியுடன் தொடர்பு கொள்ளவும்.

11 19 26 28 30 31 32 37 38 57 65 68 72 113 118 126 132 140 142 145 147 150 154 170 242 250 252 254 255 259 260 261 263 266 268 270 271 272 273 275279 282 439 440 440A 441 442 443 445 446 450 451 452 455 457 465 466 467 469 470 473 475 477 478 484 586 587 588 591 593 596 597 600 602 874 877 878 880 882 884 885 888 890 892 893 894 900 901 907 908 911 912 915 916 917 918 919 924 926 927 928 929 933 934 936 939 940 942 944 945 946 948 950 951 952 958 959 960 962 1344 2098 2100 2102 2123 2126 2128 2278 2279 2283 2285 முதல் 2288 2294 2295 2297 2299 2303 2307 2311 2312 2313 2316 2317 2318 2319 2326 2329 2333 2338 2341 2346 2351 2353 2357 2358 2360 2368 2373 3650 முதல் 3658

என்று பெரிய திருமொழி கூறுவதிலிருந்து இரண்டு வகை உண்மைகளை உணரலாம்.

1. பரம்பொருள் திருவருளை உணர்த்தும்வண்ணம் புறக்கோயிலினின்றும் நீங்கி அகக்கோயிலில் குடி புகுகின்றது. இறையருளால் ஆட்கொள்ளப்பட்டவர்களே அடியவர்கள். அவர்களது நிலை நடமாடும் கோயில் என ஆகிறது.

2. திருவருள்தாம் நம்மை முற்றிலும் இயக்குகிறது; நல்வழிப்படுத்துகிறது; மண்ணில் நல்லவண்ணம் வாழ வகை செய்கிறது என்றெல்லாம் உணரத்தலைப்படும்போது மெய்யடியார்கள் இறைவனை என்றென்றும் தமது அகக்கண்களால் கண்டு ஆனந்தம் கொண்டு நெஞ்சைவிட்டு அகலாமல் நிலைபெறச் செய்வர்.

'யார் என்னை எவ்வாறு விரும்பி அடைகிறார்களோ அவ்வாறே நானும் அவர்களை அடைகிறேன் என்று கீதையில் கண்ணன் உபதேசம் செய்கிறார். முதல் திருவந்தாதியில் பொய்கையாழ்வார் 'சக்கரத்தை உடைய எம்பெருமான் தனது பக்தர்கள் விரும்பிய வண்ணம் எந்த உருவில் வர வேண்டுமென விரும்புகிறார்களோ அந்த உருவத்தைத் தானே ஏற்றுக் கொள்வான்; இன்னும் தன் பக்தர்கள் எவ்விதமாக விரும்பிச் சிந்தித்து, இமைக்காது இருப்பார்களோ (அதாவது இடைவிடாது பாவனை செய்கிறார்களோ) அந்தவிதமாகவே மாறிவிடுவது எம்பெருமானின் திருவுள்ளம்' என்று விளக்குகின்றார்.

"சார்ந்த இரு வல்வினைகளும் சரித்து
மாயப் பற்றறுத்து
தீர்த்து தன்பால் மனம் வைக்கத்
திருத்தி வீடு திருத்துவான்
ஆர்ந்த ஞானச் சுடராகி அகலம் கீழ்
மேல் அளவிறந்து
நேர்ந்த உருவாய் அருவாகும் இவற்
றின் உயிராம் நெடுமாலே"

என நம்மாழ்வார் திருவாய்மொழி மலர்ந்தருளுவதிலிருந்து எம்பெருமான் வல்வினைகளைப் போக்கி அஞ்ஞானப் பற்றறுத்து தன்னை என்றும் நினைக்கவைத்து ஞான ஒளியாகி நின்று எங்கும் வியாபித்து உருப்பொருள் அருவப் பொருள் ஆகியவற்றின் உயிராய் நின்று தன் மேல் அன்பு கொண்டவனாக உள்ளான் என உணரலாம். அதாவது, இறைவன் தனக்கு உரிமையான ஆன்மாக்களின் நன்மையைத் தானே நாடிவந்து தன்னை அடையுமாறு அவர்களைப் பண்ணுகின்றான் என்பது தெளிவாகிறது. 'அவனருளாலே அவன்தாள் வணங்கி' என்ற மாணிக்கவாசகரின் வாசகமும் இவண் சிந்திக்கத்தக்கது.

"திருப்பெருந்துறையில் எழுந்தருளியிருக்கும் சிவபெருமானே! இப்போது நீ எனக்கு அருள்புரிந்து அஞ்ஞானமென்னும் இருளகற்றி உள்ளத்தில் எழுகின்ற சூரியனின் ஒளி போன்ற ஞானச்சுடரால் உன்னுடைய உண்மையான இயல்பை நான் நினைக்காமலே நினைந்தேன். உன்னையன்றி வேறு ஒரு பொருளும் இல்லை எனும்படி சென்று சென்று அணுவாய்த் தேய்ந்து தேய்ந்து ஒரு வடிவமாகின்றாய்! நீ பொருளும் அல்ல. உன்னையன்றி ஒரு பொருளும் இல்லை. உன்னை உள்ளவாறு அறியக்கூடியவார் எவர்?" எனும் பொருள்படப் பாடும் மாணிக்கவாசகரே கீழ்க்கண்ட பாடலையும் பாடுகின்றார்.

தந்தது (உ)ன் தன்னைக் கொண்ட(து)
என் தன்னைச்
சங்கரா ஆர்கொலோ சதுரர்
அந்தம் ஒன்(று) இல்லா ஆனந்தம்
பெற்றேன்
யாதுநீ பெற்றது ஒன்(று) என்பால்
சிந்தையே கோயில் கொண்ட எம்
பெருமான்
திருப்பெருந் துறைஉறை சிவனே
எந்தையே ஈசா உடல் இடங் கொண்
டாய்
யான் இதற்(கு) இவன் ஓர் கைம்
மாறே

இங்கே எம்பெருமானுக்கும் அடியவருக்கும் ஒரு பண்டமாற்று நடைபெறுகிறது. இறைவன் தன்னையே தந்துவிட்டு அடியவரை ஏற்றுக்கொள்கிறான். இதில் வெற்றி யாருக்கு? முடிவற்ற ஆனந்தம் பெற ஆன்மாவால் முடிகிறது. ஆனால் அழுக்கு கொண்ட உடலையே இடமாகக் கொண்டிருக்கும் இறைவனின் இந்த எளிவந்த கருணைக்குக் கைம்மாறு ஒன்றுமில்லையாம். அதாவது தன்னையே தந்துவிட்டபின் அடியவருக்குக் கொடுக்கக்கூடியது வேறு ஒன்றுமில்லையாம். ★

EDITED AND PUBLISHED ON BEHALF OF THE T. T. DEVASTHANAMS BY K. SUBBA RAO, M.A. AND PRINTED AT T. T. D. PRESS BY M. VIJAYAKUMAR REDDY MANAGER, T. T. D. PRESS, TIRUPATI-517501.

